# MANAVAR TAMIL READER

## THIRD FORM

# மாணவர் தமிழ்ப் புத்தகம்

எட்டாம் வகுப்பு - மூன்றும் பாரம்






S. R. SUBRAMANIA PILLAI,
BLISHER & BOOK-SELLER,
NEVELLY JUNCTION.

மாணவர்

# தமிழ்ப் புத்தகம்

எட்டாம் வகுப்பு - மூன்றும் பாரம்






பிரசுரகர்த்தர் :

எஸ். ஆர். சுப்பிரமணிய பிள்ளை,

திருநெல்வேலி ஜங்ஷன்.

பதிவு செய்தது] 1934 [விலை அணு 9

# FOREWORD

I have great pleasure in welcoming the Tamil Readers of 'மாணவர் தமிழ்ப் புத்தகம்' series for use in the incomplete Secondary Schools as well as in the Elementary Schools. The series of Tamil Readers already in use are many and of different qualities. I find this new series have some special features which should recommend them to the authorities concerned.

The Primer is sure to appeal to the mind of a child, without cramming it with things that he need not know. The words introduced are all simple and familiar, and the illustrations are such as to arouse the interest of the pupils.

The Readers intended for the Elementary Schools are graduated in subject-matter as well as in language, and the lessons in each Reader are also graded. They are again calculated to instil useful knowledge into the minds of pupils with the help of familiar objects, ample scope being afforded for the exercise of imagination.

The Readers for use in the incomplete Secondary Schools contain lessons of varied interest and are peculiarly adapted to the needs of Tamil boys and girls. They present a simple scheme of

useful knowledge which, without burdening their minds, will appeal to their understanding, stir the imagination and awaken in them a sense of wonder.

Indeed, the plan and purpose of this new series is to present a healthy and rational outlook on life which is bound to foster in the pupils a spirit of inquiry. The songs found in the Readers often have poetic excellence, and these as well as the stories are well adapted for the different classes. The diction is choice and the writer does not make an effort to avoid modern words or modern forms. Above all, these Readers are non-sectarian in character, so that they can be used in Hindu, Muhammadan or Christian Schools.

With such special features among others, the Readers ought to be popular with the pupils as well as teachers in the Tamil districts.

S. ANAVARATAVINAYAKAM PILLAI,
M.A., L.T.
Reader in Tamil,
University of Madras.

LIMBDI GARDENS,
ROYAPETTAH, MADRAS.
*21st December, 1933.*

# பொருளடக்கம்

## செய்யுட் பகுதி

மாணவர்

# தமிழ்ப் புத்தகம்

## எட்டாம் வகுப்பு

### 1. பாண்டிய மன்னர்—I

பண்டைப் பழங்காலங்களிலே பாண்டிய மன்னர்கள் தமிழகத்தின் ஒருபகுதியில் ஆட்சி செலுத்தி வந்தனர். 'ஆதி இன்னதென்று ஓதுதற்கரிய வழுதியின் தொழுகுலம்' என்று அறிஞர் பாண்டிய ராஜ வம்சத்தைச் சிறப்பித்துப் பேசுகின்றனர். வால்மீகி ராமாயணமும் வியாஸ பாரதமும் பாண்டிய நாட்டைக் குறித்துப் பிரஸ்தாபிக்கின்றன. பஞ்ச பாண்டவர்களில் ஒருவனை அர்ச்சுனன் பாண்டிய அரசன் மகளாகிய சித்திராங்கதை யென்பவளை மணஞ் செய்து கொண்டானென்று வியாஸர் கூறுவதால், பாரத காலத்திலேயே வடநாட்டிலிருந்த ஆரிய மன்னர்களுக்கும் தென்னுட்டிலிருந்த தமிழ் வேந்தர்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருந்ததென்று ஊகிக்கலாம். பழைய உலகத்தின் பேரரசர்களில் மிகவும் சிறந்தவரென்று மதிக்கப்பெறும் அசோக சக்கரவர்த்தியின் காலத்திலே, நமது தேசத்தின் தென்கோடியிலிருந்த பாண்டியநாட்டிலும் பௌத்தசமயம்

பரவத் தொடங்கியது. அந்நாளிலே பாண்டிய ராஜ்யம் கல்விச் சிறப்பிலும் நாகரிக முதிர்ச்சியிலும் முன்னணியில் நின்றதென்று கருதுதல் கூடும்.

பாண்டியர்களின் பழைய தலை நகரங்களான தென் மதுரையையும் கபாட புரத்தையும் கடல் கொண்டதென்றும், அத்தலைநகரங்களோடு பாண்டியர்கள் ஆண்டுவந்த சில நாடுகளும் அழிந்துபோயின வென்றும், பிறகு அம்மன்னர்கள் வைகையாற்றங் கரையில் தங்கள் பழம்பதியின் நினைவுக்குறியாகவே **'மதுரை'** யென்ற ஒரு புதிய நகரத்தை நிர்மாணஞ் செய்து கொண்டனரென்றும் சொல்லுகிறார்கள். இம்மன்னர்கள் மொழிப்பற்றும் நாட்டுப்பற்றும் வாய்ந்தவர்களாக விருந்ததால், இவர்களைத் **தமிழ் வேந்தர்க**ளென்று சிறப்பித்துக் கூறுவதுண்டு. இவ்வரசர்கள் கல்விப் பொருளிலும் செல்வப் பொருளிலும் ஒருங்கே சிறந்து விளங்கினார்கள்; இவர்களிற் சிலர் வரையாது கொடுக்கும் வள்ளற் பெருமக்களாகவு மிருந்தனர். இவர்களுடைய வீரத்திற்கும் ஓரளவில்லை. இவர்களிற் பலரும் நீதி பரிபாலனத்தில் விசேஷ சிரத்தை காட்டினர்; தமிழ்ப் புலவர்களால் பாடப்படுவதைப் பெரும்பேறாகக் கருதி வந்தனர். இவர்கள் கவிஞர்களும் அறிஞர்களுமான பெரியோர்களுடன் தோழமை பூண்டு 'தன்னுயிர் போல மன்னுயிர் காத்து' வருவதே தங்கள் குறிக்கோளாகுமென நம்பி வாழ்ந்தனர்.

பாண்டிய மன்னர்களின் அமைச்சர்களும் சிறந்த வீரர்களாகக் காணப்பட்டனர்; இவர்கள்

அரசன் தவறு செய்தால் அதையெடுத்துக் காட்டி இடித்துரைத்து அவனைத் திருத்தும் ஆற்றல் வாய்ந்தவர்களாகவு மிருந்தார்கள். மந்திரிசபைகளில் சேனுதிபதிகளும் தூதர்களும் இரகசிய அதிகாரிகளும் சாத்திரம் வல்ல அறிஞர்களு மிருந்தனர். இச்சபைகளைத் தவிர இராஜ்யத்தின் வரவு செலவுகளையும் வியாபாரங்களையும் தேசக்காவலுக்குரிய படைகளையும் கவனிப்பதற்காகவும் வேறு சபைகள் அமைக்கப்பெற்றிருந்தன. இத்தகைய சபையோரின் உதவியால் பாண்டிய மன்னர்கள் இயன்றவரையில் நடுநிலை பிறழாது செங்கோல் செலுத்தி வந்தனர்.

உழுதொழிலே தமிழ்மக்களின் முக்கியமான தொழிலாக விருந்ததால், அரசர்கள் அது இனிது நடைபெறுதற்கின்றியமையாத பல வசதிகளையும் அமைத்திருந்தனர். பலவிடங்களிலும் அவர்கள் ஊர்களை யமைத்து ஜனங்களைக் குடியேற்றி, அவர்களுக்கு வேண்டிய கால்வாய்கள், குளங்கள் முதலிய நீர்நிலைகளை வெட்டுவித்தும், ஆறுகளில் அணைகள் கட்டிக்கொடுத்தும், பலவிதமான சௌகரியங்களைச் செய்திருக்கிறார்கள். இவ்விதமாக விவசாயத்தைப் பாதுகாத்து வந்ததுபோல், அவர்கள் பலதிறக் கைத்தொழில்களையும் வளர்த்து வந்தார்கள். வியாபாரத்திற்கு இன்றியமையாத பல வசதிகளையும் போக்குவரவுக்கு ஏற்ற பல சாலைகளையும் பிற சாதனங்களையும் அமைத்துதவினார்கள்.

ஆட்சி முறைக்கேற்பப் பாண்டிய நாடு பல பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டிருந்தது. ஊர் அல்லது

கிராமமே நாட்டின் உயிர்நாடியாக மதிக்கப்பட்டது. பல வூர்கள் சேர்ந்தது ஒரு **சதுர்வேதி மங்கலம்**; பல சதுர்வேதி மங்கலங்கள் சேர்ந்தது ஒரு **நாடு**; பல நாடுகள் கூடியது ஒரு **வளநாடு**; பல வளநாடுகள் சேர்ந்தது ஒரு **மண்டலம்**. இவ்விதமாகப் பிரிக்கப் பட்டிருந்த பாண்டிய நாட்டின் பகுதிகளிற் சில, வட ஆரிய நாடு, தென் ஆரிய நாடு, கீழை வேம்புநாடு, மேலைவேம்புநாடு, வல்ல நாடு, முரப்ப நாடு, வழுதி வளநாடு, புறத்தாய நாடு, நாஞ்சி நாடு, முதலான பெயர்களால் அழைக்கப்பெற்றன. கிராம சபையின் உறுப்பினர் ஒரு சதுர்வேதி மங்கலத்தைப் பரிபா லித்து வந்தனர். ஒவ்வொரு ஆண்டிலும் சபைகளின் உறுப்பினர் புதிதாக அவ்வவ்விடங்களிலுள்ள ஜனங் களால் தேர்ந்தெடுக்கப்பட்டனர். சுருங்கக் கூறு மிடத்து, பாண்டியர்களின் இராஜ்ய பரிபாலனம் அவ்வரசர்களுக்குட்பட்ட பலவித சபைகளாலேயே நடைபெற்று வந்ததென்னலாம்.

பாண்டியர்கள் பலவிதமான வரிகளை வசூலித் தார்கள். இவற்றுட் சில, 'நெற்கடமை', பொன்வரி, இனவரி, நத்தவரி, ஆள்வரி, நாட்டுவரி, தரி இறை, செக்கிறை, ஜலவரி, கொடித் தோட்டவரி முதலியன. வரிகள் பலவாக விருப்பினும், அவை சொற்பக் கட் டணங்களாகவே யிருந்திருக்கக் கூடுமென்றும், இவ் வரிகளில் பலவும் தானியரூபமாகவே செலுத்தப்பட் டிருக்க வேண்டுமென்றும் ஊகிக்கலாம். இவ்வரிக ளிற் சில, தொழில் வரிகளாகும். தொழில் வரி, நில வரி தவிர, வியாபாரத்தின் மேலும் வருமானத்தின்

மேலும் விதிக்கப்பட்ட வரிகளுமுண்டு. நிலங்களை மண்ணின் உயர்வு தாழ்வுக் கேற்பத் தரப்படுத்தி விளைவிற்குத்தக்கபடி வரி விகிதங்கள் ஏற்படுத்தப் பட்டிருந்தன. இவ்வரிகளைக் குடிகளுக்குத் துன்பம் ஏற்படாத நிலையில் பாண்டியர்கள் வசூல் செய்து வந்தார்கள்.

இவ்விதமாக வசூல் செய்யப்பட்ட வரித்தொகை களைப் பெரும்பாலும் அரசர்கள் குடிகளுடைய நன் மைகளின் பொருட்டே செலவு செய்து வந்தனர். அவர்கள் அறச்சாலைகளுக்கும் ஆலயங்களுக்கும் நிலங்களையும் பொற்காசுகளையும் தானமாக வழங்கி னர். கிராமங்களுக்குப் பொதுவான கிணறுகளும் குளங்களும் ஆங்காங்கு வெட்டப்பட்டன; கெட்டுப் போகாதபடி அவற்றைப் பாதுகாக்கும் பொறுப்பு கிராம சபையைச் சேர்ந்ததாகும். பல விடங்களிலும் அரசர்களால் புதிய கோவில்கள் கட்டப்பட்டன; பழைய கோயில்கள் புதுப்பிக்கப் பெற்றன. கோவில்களில் அமைக்கப்பட்ட சிற்ப வேலைகளும் சித்திர வேலைகளும் பொது ஜனங்களின் பக்தியைத் தூண்டியதோடு, அவர்களது அறிவாற்றல்களையும் தூண்டி வளர்த்தன. ஆலயங்களில் வெகு விமரிசை யாக நடைபெற்ற திருவிழாக்கள், பல ஜனங்கள் ஓரி டத்தில் வந்துகூடி உற்சாகமாகப் பொழுது போக்கு வதற்கும், சங்கீதம் நாட்டியம் முதலிய கலைகளில் விருப்பம் கொள்ளுவதற்கும் வேண்டிய வசதிகளை அளித்தன.

கோவில்களில் வேதாகமங்கள், உபநிஷத்துக்

கள், இதிகாச புராணங்கள் முதலியவற்றைப்போதிப் பதற்கும் பல அறிஞர்கள் நியமிக்கப்பட்டிருந்தனர். இதனுல் ஆலயங்கள் பக்திநிலயமாக விளங்கியதோடு, ஞானத்தின் வளர்ப்புப்பண்ணையாகவும் விளங்கியன என்னலாம். துறவிகளும் வழிப்போக்கர்களும் புலவர் களும் பொது ஸ்தலமான கோவிலிற் கூடி, மத விவ காரங்கள், சாஸ்திர விவகாரங்கள் முதலியன செய்து வந்ததால், அவற்றைக் கவனித்துவந்த கிராம வாசி களின் அறிவு விசாலமடைந்திருக்கவேண்டும். அந் நியர் படையெடுப்பு முதலிய ஆபத்துக்கள் ஏற்பட்ட காலங்களில், கோயில்கள் அரசர்களுக்கும் ஜனங் களுக்கும் கோட்டைகளைப்போல் உதவியதுமுண்டு. பாண்டியமன்னர்கள் கோடிக்கணக்கான பொருளைச் சிவாலயம் விஷ்ணுவாலயம் முதலிய கோயில்கள் கட்டு வதிற் செலவு செய்ததற்குக் காரணம், அவர்களது விசேஷ மதப்பற்றேயாகும். எனினும் இம்மன்னர் கள் புறச்சமயங்களாகிய ஜைன பௌத்த சமயங் களைச் சேர்ந்த ஜனங்களுக்கும் பல நன்மைகள் செய்திருக்கின்றனர். தாங்கள் சைவ வைணவ சமயத் தினரேயாயினும், எல்லா மதத்தையும் ஒன்றுபோல் நோக்கும் சகிப்புத்தன்மையும் சமரச புத்தியும் இவ் வரசர்களின் பரம்பரைக் குணமாக விருந்தன.

பாண்டியர்கள் மதப்பற்றோடு விசேஷமான மொழிப்பற்று முள்ளவர்களென்பதற்கு அவர்கள் சங்கங்கண்டு தமிழ் வளர்த்ததொன்றே தக்க சான் ருகும். அந்நாளில் பொதுஜனங்களிற் சிறுபான் மையோரே எழுதப் படிக்கத் தெரிந்தவராயிருந்த

போதிலும், இம்மன்னர் பலரும் தமிழ்க் கல்வியின் அருமை பெருமைகளை நன்குணர்ந்து தமிழ்ப் புலவர்களுக்கு விளைநிலங்களையும் பொற்காசுகளையும் யானைகள், குதிரைகள் முதலியவற்றையும் பரிசிலாக வழங்கினார்கள். இவர்களிற் சிலர் கவிஞர்களைப் போற்றியதோடு, தாங்களே கவிஞர்களாகவு மிருந்திருக்கிறார்கள். இவர்கள் புலவர்களைத் தங்களுக்குத் தோழர்களாகவும் ஆசிரியர்களாகவும் கொண்டிருந்ததால், அந்நாளில் தமிழ்ப் புலவர்களுக்கு விசேஷ அந்தஸ்து இருந்ததென்பதும், தமிழ்க் கல்வி உன்னத நிலையிலிருந்த தென்பதும் இனிது புலனாகும்.

---

## 2. பாண்டிய மன்னர்—II.

"தேன்பெருகுஞ் சோலைத் தென்னன் வளநாடு
கனியுதிருஞ் சோலைக் கனமதுரை நன்னாடு
வாழை வடக்கீனும் வான்கமுகு மேற்கீனும்
கரும்பும் இளநீரும் கண்திறந்து மடைபாயும்
கட்டுக் கலங்காணும் கதிர் உழக்கு நெல்காணும்
அரிதாள் அறுத்துவர மறுதாள் பயிராகும்
அரிதாளின் கீழாக ஐங்கலத்தேன் கூடுகட்டும்
மாடுகட்டிப் போரடித்தால் மாளாதுசெந்நெல்லென்று
ஆனைகட்டிப் போரடிக்கும் அழகான தென்மதுரை"

இத்தகைய நிலநீர் வளங்களாலும் பிறவற்றாலும் சிறப்புற்றோங்கிய பாண்டியநாட்டை ஆண்டுவந்த இராஜவம்சம், கர்ணபரம்பரையும் எட்டிப்பார்க்க இயலாத காலந்தொட்டு இற்றைக்குச் சற்றேறக் குறைய இருநூறு ஆண்டுகளுக்கு முன்வரை வாழை

யடி வாழையாகத் தழைத்து வந்திருப்பது உலகசரித்திரத்தி னதிசயங்களி லொன்ருகும். இவ்வம்சத்தைச் சேர்ந்த ஆயிரக்கணக்கான அரசர்களிற் சிலரைக் குறித்துப் புராணங்களின் வாயிலாகவும் தமிழ் நூல்களின் வாயிலாகவும் செப்பேடுகள் சிலா சாசனங்கள் வாயிலாகவும் நாம் சில விஷயங்களைத் தெரிந்து கொள்ளுகிருேம். இவ்வரச பரம்பரையின் மூல புருஷன் சந்திரனென்று புராணங்கள் கூறுவது, இவ்வம்சத்தின் தொன்மையையும் இவ்வம்சத்தினர் முன்னுளிலேயே வடநாட்டிலிருந்த சந்திரகுல க்ஷத்திரியர்களோடு கொண்டும் கொடுத்தும் வாழ்ந்தன ரென்பதையும் ஒருங்கே குறித்து நிற்பதாகும்.

பாண்டியர்கள் சரிதகாலத்திற்கு மிகவும் முற்பட்ட காலத்திலிருந்த ஒரு பழந்தமிழ்க் குடியைச் சேர்ந்தவராவர். இவர்கள் தாய்மொழியாகிய தமிழ் மொழியை வளர்க்கும் பொருட்டுப் பழைய காலத்தில் மூன்று சங்கங்கள் கண்டனர் என்பர். இச்சங்கங்களைக் குறித்து இந்நாளில் சில ஆராய்ச்சிக்காரர் பலவகையான வாதங்கள் நிகழ்த்தி வந்தபோதிலும், பழைய பாண்டிய அரசர்கள் இயல், இசை, நாடகம் என்ற முத்தமிழையும் முச்சங்கங்களின் வாயிலாக வளர்த்து வந்தனரென்பது நமது முன்னேர்களின் உறுதியான நம்பிக்கையாகும். முதற்சங்கம் கடல் கொள்ளப்பட்ட தென் மதுரையி லிருந்ததென்றும், இடைச்சங்கம் கபாடபுரத்தி லிருந்ததென்றும், இக் கபாடபுரமும் ஒருசமயம் கடலால் அழிந்ததென்றும் சொல்லுகிருர்கள். மூன்ருவது சங்கமாகிய கடைச்

சங்கத்தைப்பற்றி நமக்குச் சிலகுறிப்புக்கள் கிடைத்துள்ளன. இச்சங்கத்தில் நக்கீரரென்ற ஒரு பெரும் புலவரிருந்ததாகவும், அவர் சிவபெருமான் கூறிய செய்யுளிலும் குற்றங்கண்டு 'குற்றம் குற்றமே!' என்று சாதித்ததாகவும் கூறப்படும் கதையால் பழந் தமிழரது ஆராய்ச்சியறிவு எத்தகைய உயர்ந்த நிலையிலிருந்ததென்பது உய்த்துணரப்படும்.

நக்கீரர் தாம் பாடிய 'நெடுநல் வாடை' என்னும் சிறந்த நூலில், **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன்** என்ற பாண்டிய மன்னனைப் புகழ்ந்து பாடியிருக்கிறார். இவ்வரசன் தமிழ்மொழியிலும் தமிழ்ப் புலவரிடத்திலும் நீங்காப் பற்றுடையவனாக விருந்ததோடு ஒப்புயர்வற்ற மகா வீரனாகவும் விளங்கினான். சேரன் சோழன் என்ற இரு பெருவேந்தரும் தமக்குத் துணையாக ஐந்து சிற்றரசர்களையும் சேர்த்துக் கொண்டு இவனோடு போர்செய்ய வந்தனர். இம்மா பெரும்போர் **தலையாலங்கானம்** என்னுமிடத்தில் பயங்கரமாக நடைபெற்றது. இப்போரில் பாண்டியன் எதிரிகளை முற்றிலும் முறியடித்ததால், இவனுக்குத் **தலையாலங்கானத்துச் செருவென்ற நெடுஞ் செழியன்** என்ற பெயர் வந்தது.

இப்பாண்டிய மன்னன் தனது இராஜதானியான மதுரையைப் புதுப்பிக்கும்பொருட்டு வட நாடுகளினின்றும் பல சிற்பிகளை வரவழைத்தானென்றும், அவர்களின் உதவியினாலும் தன் சிற்பிகளின் உதவியினாலும், மலைபோல் விளங்கும் மாளிகைகளையும், அரண்மனைகளையும் ஆஸ்தான மண்டபங்களை

யும், ஆடரங்கு, அறச்சாலை, அவைக்களம் முதலியவற்றையும் அமைத்து மதுரையை அழகு செய்தான் என்றும் அறிகிறோம். இங்ஙனம் வீரனாகவும் இரசிகனாகவும் ஒருங்கே விளங்கிய மன்னன், முத்தமிழையும் ஆராய்ந்த கவிப்புலவனாகவும் மற்றப் புலவர்களை யாதரித்த பெரு வள்ளலாகவுமிருந்தான். இவன் காலத்தில் தமிழ்ப் புலவர்கள் பல ஜாதிகளிலுமிருந்தனர்; பெண்பாலாரிலும் புலவர் சிலர் காணப்பட்டனர்.

இவனைப்போல் வீரமும் புலமையும் வாய்ந்த பாண்டியர்கள் இவனுக்கு முன்னும் பின்னும் வாழ்ந்திருந்தார்கள். கி. பி. பத்தாவது நூற்றாண்டு வரையிலிருந்த பாண்டியர்களை **முற்காலப் பாண்டியர்களென்றும்** கி. பி. பதினாலாவது நூற்றாண்டுவரையில் ஆட்சி செலுத்திவந்த பாண்டியர்களை **இடைக்காலப் பாண்டியர்களென்றும்** அதற்கப்பால் வாழ்ந்த பாண்டியர்களைப் **பிற்காலப் பாண்டியர்களென்றும்** கூறலாம். ஆரியப் படைதந்த நெடுஞ்செழியன், பல்யாகசாலை முதுகுடுமிப் பெருவழுதி, திருஞான சம்பந்தர் காலத்திலிருந்த கூன்பாண்டியன், மதுரகவி யாழ்வாரை மந்திரியாகக் கொண்டிருந்த நெடுஞ்சடையன் பராந்தகன் முதலியவர்கள் 'முற்காலப் பாண்டியர்களிற்' சிலராவர்.

இடைக்காலப் பாண்டியர்களில், சோழன் தலைகொண்ட வீரபாண்டியன், எம்மண்டலமும் கொண்ட சுந்தர பாண்டியன், எம்மண்டலமும் கொண்ட குலசேகர பாண்டியன் முதலியோர் முக்கியமானவர்கள். சோழன் தலைகொண்ட வீரபாண்டியன் காலத்

திற்குமுன், பாண்டிய ராஜ்யம் சோழர்களால் ஒடுக்கப்பட்டு உருக்குலைந்திருந்தது. இத்தகைய இராஜ்யத்தை மீண்டும் தக்க முறையில் ஸ்தாபிக்கமுயன்ற வீரபாண்டியன், இரண்டாவது பராந்தக சோழன் என்ற சுந்தர சோழனது தலையைக்கொய்து வெற்றியடைந்ததால், இப்பாண்டியனைச் சோழன் தலைகொண்ட பாண்டியனென்று கூறுகிறார்கள். இப்பாண்டியனைச் சுந்தரசோழன் மகனாகிய இரண்டாவது ஆதித்தன் போர்க் களத்திலே கொன்று பழிக்குப்பழி வாங்கிப் பாண்டிய நாட்டையும் தன் வசப்படுத்திக் கொண்டான்.

முதலாவது இராஜ ராஜ சோழன் காலத்தில் பாண்டிய நாடு **இராஜராஜ பாண்டிய நா**டென்றே அழைக்கப்பட்டு வந்தது. சோழ ராஜ சந்ததியாருக்குள் கலகம் ஏற்பட்ட காலத்திலேதான், பாண்டியர் மீண்டும் மதுரையை வசமாக்கிக்கொண்டு தங்கள் நாட்டைச் சுதந்திர நாடாக்கினர். மகா பராக்கிரமசாலியான **முதலாவது மாறவர்மன் சுந்தர பாண்டியனெ**ன்பவன், தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு அரசு வீற்றிருந்த மூன்றாவது இராஜராஜ சோழனையும், பல்லவர், கலிங்கர், தெலுங்கர், சிங்களர் முதலிய அரசர்களையும் வென்று திறைகொண்டான். இவன் வட இந்தியாவிலுள்ள அரசர்களையும் வென்று இமய மலையிலும் தன் கொடியை நாட்டினனென்று சாசனங்கள் கூறுகின்றன. இவன் காலத்தில் பாண்டிய நாடு மகோன்னத நிலையிலிருந்த தென்னலாம். இவன்பால் வீரத்தைப்போல் கருணையும், கருணை

யைப்போல் வள்ளன்மையும் அமைந்திருந்தன.

**எம்மண்டலமும் கொண்ட சுந்தர பாண்டியன்** கி. பி. 1251-ல் பட்டம்பெற்று இருபது ஆண்டுகளுக்குமேல் அரசு வீற்றிருந்தான். இப்பாண்டியனும், சிறந்த வெற்றி வீரனாகவும் பெரு வள்ளலாகவும் விளங்கினன். இவன் ஸ்ரீரங்கத்திலுள்ள கோவிலில் விசித்திர வேலைப்பாடுக ளமைந்த மண்டபங்கள் முதலியவை நிர்மாணஞ் செய்து வேறு பணிகளுஞ் செய்தான். இவனைப் பற்றிய சிலாசாசனங்கள் வடக்கே நெல்லூர் வரை ஆங்காங்குக் காணப்படுகின்றன. **எம்மண்டலமும் கொண்ட குலசேகர பாண்டியனும்** இடைப்பட்ட பாண்டியர் வரிசையில் பிரசித்தி பெற்றவனே யாவான். இவன் கி. பி. 1268-ல் பட்டம் பெற்று, வடநாட்டு மகமதியனொருவனைச் சேனைத் தலைவனாக்கிக்கொண்டு, பல அரசர்களையும் தனக்குக் கப்பங் கட்டும்படி செய்தான். இவன் இலங்கையரசனையும் ஜயித்து கி. பி. 1313-ம் ஆண்டு வரை செங்கோல் செலுத்திவந்தான். இத்தகைய வீரன் தன் மகனால் கொலை செய்யப்பட்டானென்பது விசனிக்கத் தக்க தன்றோ?

பிற்காலத்துப் பாண்டியர்களில் மிகவும் பிரசித்திபெற்றவன் **கோச்சடையன் அரிகேசரி பராக்கிரம பாண்டியனென்பவன்**. இவன் கி. பி. 1420ல் மதுரையிலே பட்டம்பெற்றுப் பிறகு தென்காசியைத் தலைநகராகக்கொண்டு 40 ஆண்டுகளுக்குமேல் அரசு செலுத்தினன். இவன் பலமான படைகளைச் சேர்த்துக்கொண்டு பல சிற்றரசர்களையும் போரில் வென்

ஞன். தனது 28-வது வயதில் காசியாத்திரை செய்ய வேண்டுமென்ற எண்ணங்கொண்டு பிரயாணத்துக்குச் சித்தமானுன். புறப்படுவதற்கு முதல்நாளிரவு உறங்கிக் கொண்டிருக்கையில், இவன் ஒருகனவு கண்டனனும். அக்கனவில் காசி விசுவநாதர் தோன்றி, "அரசே! நீ காசியாத்திரை செய்யவேண்டாம். தென் ஆரியநாடாகிய இந்நாட்டிலேயே தட்சிண கங்கையாகிய சித்திராநதியின் வடகரையிலுள்ள இவ்வூரில் என்னைப் பிரதிஷ்டை செய்விப்பாயாக" என்று கூறினராம். அப்படியே அரசன் தென் காசியில் அற்புதமான கோவிலொன்று கட்டினுன்; கைதேர்ந்த சிற்பிகளின் உதவியால் இக்கோயிலில் விசித்திரமான வேலைப்பாடுகளமைந்த மண்டபம் கோபுரம் முதலியவற்றை நிர்மாணஞ் செய்தான். இக்கோவிலிலுள்ள சிற்ப நுட்பங்கள் மிகவும் பாராட்டத் தக்கவை; இவை 15-ம் நூற்ருண்டில் நம் தமிழ் நாட்டிலே சிற்பக்கலை எத்தகைய உயர்நிலை யடைந்திருந்ததென்பதை நன்கு வெளியிடுகின்றன.

கோச்சடையன் அரிகேசரி பராக்கிரம பாண்டியனுக்குப் பின் ஆட்சி செலுத்திய பாண்டியர்களில் குறிப்பிடத்தக்க பேரும் புகழும் வாய்ந்தவன் அதி **வீரராம பாண்டியனெ**ன்பவன். இவன் கி. பி. 1564-ல் பட்டத்துக்கு வந்து, தென் காசியிலிருந்து அரசு செலுத்தினுன். வீரப்புகழைக் காட்டிலும் தமிழ்ப் புலமையால் இவனுக்குக் கிடைத்த புகழே அதிகமாகும். இவன் வடமொழியிலுள்ள நைஷதம் முதலான நூல்களை நன்காராய்ந்து தமிழில் **'நைடதம்'**

என்ற காவியம் ஒன்று செய்திருக்கிருன்; **காசி காண்டம், கூர்ம புராணம்** முதலிய புராண நூல்களையும் தமிழில் பாடியுள்ளான். **வெற்றி வேற்கை**யென்ற சிறந்த நீதி நூலைச் சிறுவருலகத்திற்கு அளித்துப் புகழ் சூடியவனுமிவனே.

அதிவீரராமபாண்டியனுக்குப் பிறகு பாண்டிய ராஜவம்ச பரம்பரை மிகவும் தாழ்மையடைந்து விட்டது. 18-வது நூற்ருண்டில் **சீவலவரகுணராமபாண்டிய குலசேகர தேவதீக்ஷிதர்** என்ற பெயர்வாய்ந்த பாண்டியனொருவ னிருந்ததாகச் சில செப்பேடுகள் அறிவிக்கின்றன. இவனுக்குப் பிறகு பாண்டிய ராஜவம்சம் அற்றுப்போய்விட்டதென்றே கருதுதல் வேண்டும். பழைய காலங்களில் மிகவும் பிரசித்தி பெற்றிருந்ததும், கிரீஸ், இத்தாலி ஆகிய மேல்நாடுகளுக்கு முத்து, பட்டு, வாசனைத் திரவியங்கள், ஆபரணங்கள் முதலியவற்றை ஏராளமாக ஏற்றுமதிசெய்து வந்ததுமான பாண்டிய ராஜ்யம் அதிவீரராமபாண்டியன் காலத்திற்கு முன்னமேயே தனது சுதந்திரத்தை இழந்துவிட்டது. இத்தகைய இராஜ்யத்தின் சரித்திரம் தென்னிந்தியாவின் சரித்திரத்திலே ஒருமுக்கியமான பகுதியாகக் கருதத் தக்கது.

---

### 3. குதிரையின் புலம்பல்.

கற்றுத் தெரிந்த நல்மானிடரே—எம்மைக்
காக்க பிறந்த பெரியோரே
சற்று மறிவில்லா எம்மொழிக்கும்—செவி
சாய்க்கத் திருவுள்ளம் கொள்ளுவீரே. 1.

வளர்ந்து வரும்வாலை வெட்டிவெட்டித்—தேய்ந்த
மாறுபோலாக்கிக் குறைத்திடும் நீர்
தளர்ந்த பொழுதெங்கள் ஈப்பகை—ஓட்டிடத்
தக்க உதவிகள் செய்வதுண்டோ? 2.

இரும்புக் கடிவாளம் மாட்டுவதேன்—வாயும்
ஈசன் படைத்ததிதற் காமோ?
பெரும்புவி மீதினி லுங்களுக்கும்—இந்தப்
பேதைகள் செய்த பிழைகளுண்டோ? 3.




வம்புகள் பேசிடும் வாயையன்றோ—பூட்டி
வைப்பது நீதி முறையாகும்
நம்பியிருப்போர்க்குத் துன்ப மிழைப்பது
நல்லோர் பெரியோர் செயலாமோ? 4.

வெள்ளிப் பூண் கட்டிய சேணமிட்டால்—நெஞ்சு
வேதனை யில்லா திருந்திடுமோ
அள்ளியிடும் பிடிப்புல்லுக்காக—எங்கள்
ஆவியைக் கொள்வதழகாமோ ? 5.

பக்கம் திரும்பியே பார்த்திடாமல்—எங்கள்
பார்வையைக் கட்டி மறைப்பதுமேன்?
திக்கெலாந்தந்த பிரமனிலும்—நீவிர்
தீவிர புத்தி யுடையவரோ? 6.

திண்ணிய லாடமும் கட்டுவதேன்?—அதில்
தீயெழ எம்மையும் ஓட்டுவதேன்?
புண்ணியம் நீர்செய்ய வேண்டாமையா—எம்மைப்
போக்கிலே விட்டிடல் போதுமையா. 7.

எண்ணமுடியாத் தோல் பட்டைகளைக்—கட்டி
எம்மீதிறுக்கி முறுக்கி வைப்பீர்
கண்ணுக் கழகவை யாயிடினும்—எங்கள்
கண்டம் நெரிவ தறியீரோ? 8.

பற்றிமுதுகினில் ஏறிக்கொள்வீர்—எம்மைப்
பட்சிகள் போலப் பறக்கச்செய்வீர்
சற்றும் இரக்கமில் லாதவரே—நீங்கள்
சாத்திரம் கற்ற பயனிதுவோ? 9.

ஈசனளித்தகா லிரண்டிருக்க—நீரும்
எங்கள்குறுக்கை முறிப்பதேனோ?
தாசரைப்போல் வேலை செய்திடினும்—தயை
சற்றுமுமக்கு வருவதுண்டோ? 10.

கையில் சவுக்கொன்று போதாதென்றோ—இரு
காலிலும் முட்களைக் கட்டிக்கொண்டீர்

ஐயையோ! ஏழையேம் ஆவிபறித்திட
ஆயிரம் கூற்றுவர் வேண்டுமேயோ. 11.

வண்டியில் கொண்டெம்மை மாட்டுகின்றீர்—காலை
மாலையெல்லாம் தட்டி ஓட்டுகின்றீர்
நொண்டினுலும்விட்டுப் போகமாட்டீர்—உடல்
நோகஅடித்து வெருட்டுவீரே. 12.

மோட்டார்வண்டி வந்தும் மோட்சமில்லை—நாங்கள்
முன்செய்த தீவினைக்கென் செய்குவோம்
ஏட்டால் எழுத அடங்குமோ—கஷ்டங்கள்
யாரிடம் சொல்லி யழுவோமையா. 13.

கோடிகோடி ஸைக்கிள் வந்திடினும்—எங்கள்
கூட்டத்திற்கேதுமோர் நன்மையுண்டோ
ஓடியோடி உயிர் ஓய்ந்திடவோ—எம்மை
உண்டாக்கிவிட்டான் உடையவனே. 14.

மேடுபள்ளங்களில் ஓடவேண்டும்—வெய்ய
வேனில் மழைகளில் ஓடவேண்டும்
காடுசெடிகளில் ஓடவேண்டும்—இந்தக்
கஷ்டங்கள் யாரிடம் சொல்வோமையா. 15.

கொட்டகைகூடாரம் போட்டுக் கொள்வீர்—அதில்
கூத்தாடிக் கூத்தாடி ஓடச்சொல்வீர்
பட்டினியாக இறந்திடினும்—இந்தப்
பாடெவர் பட்டுப் பிழைப்பரையா. 16.

ஆங்காரத்தாலும் பேராசையாலும்—நீங்கள்
அண்டை அரசரைப் போர்க்கிழுத்தால்
தாங்காத் துயரெலாம் தாங்கிச் சலித்துயாம்
சாவதும் எங்கள் தலைவிதியோ. 17.

காலிளைப்பாறியே நிற்கவொட்டீர்—வாயில்
கௌவிய புல்லையும் தின்ன வொட்டீர்
மூலமுடுக்கென்று மெண்ணமாட்டீர்—எம்மை
மூச்சு விடாமல் துரத்துவீரே. 18.

ஆழக்குக்காண மளித்திடுவீர்—அதற்
காயிரம் வேலையுமிட்டிடுவீர்
ஏழைக்கிரங் கெனும் நீதிமொழி—நீங்கள்
ஏட்டில் படித்ததை ஏன் மறந்தீர். 19.

சித்தமிரங்கிட வேண்டுமையா—எம்மை
க்ஷேமமாய்க் காத்திடவேண்டுமையா
புத்தமுனியருள் போதனையை—என்றும்
போற்றுதலுங்கள் கடமை ஐயா. 20.

—தேசிக விநாயகம் பிள்ளை.

---

## 4. ஜான். டி. ராக்பெல்லர்.

ஜான். டி. ராக்பெல்லர் என்ற அமெரிக்கர் உலகப் பிரசித்திபெற்ற பெருஞ்செல்வர்களி லொருவர். இவர் உலகத்தின் எல்லாப் பாகங்களிலுமுள்ளவர்களுக்கும் அநுகூல முண்டாகும்படி இதுவரைசுமார் இருபதுகோடிப் பவுனைத் தருமத்திற்களித்த வள்ளலாகவும் விளங்கினர். இவரது பெருஞ் செல்வம் இவரால் சுயமாகச் சம்பாதிக்கப்பட்டதேயாகும். தமது பொருளின் பெரும் பகுதியையும் உலகத்தில் பல்வேறு பாகங்களிலுமுள்ள ஜனங்களின் நன்மைக்காகத் தாராளமாய் அள்ளிக்கொடுத்த இவ் வள்ளல், பொருளீட்டிப் புகழ்படைத்த வரலாறு

விசித்திரமாக விருப்பதுடன் இளைஞர்களுக்குப் புத்துணர்ச்சி யளிக்கத்தக்கதாகவு மிருக்கிறது.

ராக்பெல்லர் 1838-ம் வருஷம் ஜூலைமாதம் 8-ம் தேதி மிகவும் எளியதான ஒரு குடும்பத்தில் பிறந்தார். இவர் தகப்பனார் தமக்காகவும் தம்முடைய மனைவிக்காகவும் ஆறு குழந்தைகளுக்காகவும் ஒவ்வொரு நாளும் அதிகநேரம் கஷ்டப்பட்டு உழைத்து வந்தார். அவருக்குச் சொந்தமாக விருந்த சொற்ப நிலம் நல்ல விளைவைக் கொடுக்கவில்லை; அவரது குடும்பத்தினர் ஒரு குடிசையில் வசித்துக் கொண்டு பசிப்பிணியையும் வறுமைப் பிணியையும் நன்ருக அநுபவித்து வந்தனர். இதனல் ராக் பெல்லரின் இளமைப் பருவம் துன்பத்தால் இழைக்கப்பட்டிருந்ததென்றே கூறலாம். இத்தகைய இளமைப் பருவத்திலும் அவர் தாம் ஒரு காலத்தில் பெருஞ் செல்வராகக் கூடுமென்று கனவு கண்டனரென்ருல் அது உங்களுக்கு ஆச்சரியமாக விருக்கிறதல்லவா?

ஒருநாள் ராக்பெல்லரும் அவரது தோழனை வேருெரு சிறுவனும் ஓராற்றங்கரையில் விளையாடிக் கொண்டிருக்கையில் தாங்கள் வருங்காலத்தில் சாதிக்கப்போவதைப் பற்றிப் பெருமை பாராட்டிப் பேசிக் கொண்டனர். அப்பொழுது ராக்பெல்லர் "நான் பெரியவனனல், லட்சம் டாலர்களுக்கதிபதியாவேன்" என்று கூறினர். இத்தகைய தன்னம்பிக்கை நாளடைவில் வளர்ந்து வளர்ந்து பிற்காலத்தில் அவரை உலகப் பெருஞ் செல்வர்களில் ஒருவராக விளங்கும்படி செய்துவிட்டது.

இவ்விதமான எண்ணங்கள் உள்ளத்தில் குடி கொண்டிருந்ததால், ராக் பெல்லர் சிறுவயதிலேயே குடும்பத்தில் தமது தந்தையாருக்குச் சுமையாக விருக்க மனமில்லாதவராய், ஏதாவது ஒரு தொழில் முயற்சியில் ஈடுபட்டுப் பொருளீட்ட விரும்பினர். தொழில் முயற்சியே பொருள் விளைக்கும் சாதனம் என்பது இளமையிலேயே அவர் உள்ளத்தில் வேரூன்றிவளர்ந்த கொள்கையாகும். ராக்பெல்லர் பெருமுயற்சி செய்தபோதிலும் அவரதுவிருப்பம் எளிதிற்கைகூட வில்லை. ஒவ்வொரு வியாபார ஸ்தலத்திற்கும் காரியாலயத்திற்கும் சென்று ஏதாவது வேலை கிடைக்குமாவென்று கேட்டுப் பார்த்தார். காரியாலயங்கள் பலவற்றிலும் 'சிறுவர்கள் தேவையில்லை' என்ற விளம்பரப் பலகைகள் தொங்கவிடப்பட்டிருந்தன. எனினும் ராக் பெல்லரின் மனோ திடத்தையும் முகத்திலே விளங்கும் அறிவுக்கூர்மையையும் கண்டு வியவாதவரில்லை. 'இச்சிறுவனுக்கு எவ்வித உதவியும் செய்ய முடியவில்லையே!' என்று பலரும் விசனமடைந்தனர். ராக்பெல்லரோ ஒரு சிறிதும் சலிப்படையவில்லை. முடிவில் 1855-ம் ஆண்டில் ஏற்றுமதி வியாபாரம் செய்யும் ஒரு கம்பெனியில் அவருக்கு ஒரு சிறு உத்தியோகம் கிடைத்தது.

இதில் அவர் மூன்ருண்டுகள் உழைத்து வந்ததில் ஒழுங்கு இன்னதென்பதைக்கற்றுக்கொண்டார். ஒவ்வொருநாளும் பத்துமணி நேரம் உழைத்துக் காரியாலயத்திலுள்ள ஒழுங்கீனங்களையும் அவற்ருல் ஏற்பட்டிருந்த கஷ்ட நஷ்டங்களையும் நிவர்த்தி

செய்து அக்காரியாலயத்தை நல்லநிலைக்குக்கொண்டு வர முயன்றார். வரும்படியை முக்கியமானதாகக் கருதாமல் உழைப்பையே பெரிதாக மதித்துவந்த ராக்பெல்லர் அந்நாளிலேயே தமது பிற்காலப் பெருவாழ்விற்குரிய அஸ்திவாரத்தை உறுதியாக அமைத்துக் கொண்டனரென்று கூறலாம். அக்காலத்தில் அவர் ஒழுங்கின் பயனையும் உழைப்பின் சிறப்பையும் நன்குணர்ந்து கொண்டதோடு, சிக்கன வாழ்க்கையின் அவசியத்தையும் செவ்வையாக அறிந்து கொண்டார்.

ஒரு சிறு தொழிலைத் தொடங்குவதற்கும் மூலதனம் வேண்டுமென்று அவர் அறிந்திருந்தார். எதாவது ஒரு லாபகரமான தொழிலில் எவருடனாவது பங்காளியாகச் சேர்ந்து கொள்ளுவது நலமென்று தீர்மானித்து, அத்தீர்மானத்தை நிறைவேற்றுவதற்கு வேண்டிய பணத்தைச் சேர்க்க முயற்சி செய்தார். இதற்கிடையில் அவருக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்தது. ஒரு மரவியாபாரி நஷ்டமடைந்து விட்டதால், தன்னிடமிருந்த சரக்குகளையெல்லாம் மிகவும் குறைந்த விலைக்கு விற்று வியாபாரத்தை நிறுத்திவிட உத்தேசித்தான். அச்சமயம் ராக்பெல்லர் அவற்றையெல்லாம் வாங்கிக்கொண்டு அதிகமான விலைக்கு விற்றுக் கொஞ்சம் பணம் சம்பாதித்துக் கொண்டார். இவ்விதமாக இவர் தம்முடைய 19 வயதிற்குள் 160 பவுன் சேர்த்தார்.

அச்சமயத்தில் **மாரிஸ் பி. கிளர்க்** என்ற ஓர் ஆங்கிலேயன் ஒரு வியாபாரத்தை ஆரம்பிக்கவேண்டு

மென்ற நோக்கத்துடன் ஒரு கூட்டாளியைத் தேடிக் கொண்டிருந்தான். அவனிடத்தில் 400 பவுனிருந்தது; அவ்வளவு தொகையை முதலாகப் போடக் கூடிய வேறொரு கூட்டாளிவேண்டுமென்று நினைத்த அவ்வாங்கிலேயனோடு ராக்பெல்லரும் சேர்ந்து கொண்டார். இருவரும் ஆரம்பித்த வியாபாரம் நாளடைவில் செழித்தோங்கி முதல் வருஷத்திலேயே ஐந்து லட்சம் டாலர்களுக்கு நடைபெற்றது. ஆயினும் ராக்பெல்லர் தமது சிக்கன வாழ்வினின்றும் சிறிதும் மாறவில்லை; தாம் செலவுசெய்த ஒவ்வொரு காசுக்கும் கணக்கு வைத்துக்கொண்டிருந்தார். ஒரு தொழிலையும் இழிவாகக் கருதாமலும் வீண்கௌரவம் பாராட்டாமலும் உழைப்பதில் தமக்கு நிகராவார் பிறரில்லையென்று பெயர்பெற்றார்.

இவ்விதமாகப் பல வியாபாரங்களிலும் பங்கு கொண்டுழைத்து வந்த ராக்பெல்லருக்கு லாபமும் வரவர அதிகமாகக் கிடைத்துக் கொண்டே வந்தது. எனினும் அவர் திருப்தியடையாமல் மேலும் மேலும் தமது பொருட் செல்வத்தைப் பெருக்கிக் கொள்ளுவதில் கண்ணும் கருத்துமாக விருந்தார். அக்காலத்தில் மண்ணெண்ணெய் எடுக்கும் முயற்சியில் பலர் போட்டி போட்டு லாபம் சம்பாதிக்க விரும்பினர். பென்சில்வேனியாவின் வடமேற்குப் பிரதேசத்தில் பூமியிலிருந்து கிளம்பிய எண்ணெய் ஊற்றுக்களை வாங்குவதற்குத் தான் அவர்கள் போட்டி போட்டுக் கொண்டிருந்தனர். இத்தகைய எண்ணெயூற்றுக்களைக் கண்டறிந்து விருத்திசெய்து மண்ணெண்ணெய்

வியாபாரத்தால் அளவு கடந்த பொருளைச் சம்பா திக்க முடியுமென்பதை ராக்பெல்லர் கண்டுகொண் டார்.

பிறகு அவர் **ஆண்ட்ரூஸ்** என்ற ஒரு பங்காளி யோடு சேர்ந்து ஒரு கம்பெனியை ஸ்தாபித்து எண் ணெயைச் சுத்தப்படுத்தி விற்பனைக்குத் தகுதியுள்ள தாகச்செய்யும் முயற்சியை மேற்கொண்டார். இதன் பிறகு **வில்லியம் ராக்பெல்லர் கம்பெனி** யென்ற புதிய தொரு கம்பெனியை ஸ்தாபித்தார். கடன் வாங்கி யாவது வியாபாரத்தை விருத்திசெய்ய வேண்டுமென் பது இவர் கொள்கையாக விருந்ததால், பாங்கிகள் பலவற்றிலு மிருந்து ஏராளமாகக் கடன் வாங்கி யிருந்தார். இதனல் சில சமயங்களில் பாங்கிக்காரர் கள்கூட இவரது முயற்சிகளைக் குறித்துக் கவலை யடைந்ததுண்டு. ராக்பெல்லர் மாத்திரம் மண் ணெண்ணெய் ஊற்றுக்களைத் தங்கம் பெருக்கெடுத் தோடும் ஆறுகளாகவும் கடலாகவுமே எண்ணின ரென்று கூறுதல் வேண்டும்.

ராக்பெல்லரின் ஒழிவற்ற முயற்சிகளின் பல னகை 1870-ம் ஆண்டில் **ஸ்டாண்டர்டு ஆயில் கம்பெனி** தோன்றியது. இது ஏற்பட்ட பத்தாண்டுகளுக்குள் ராக்பெல்லர் உலகப் பிரசித்திபெற்ற கோடீசுவரர் களில் ஒருவாராகிவிட்டார். உலகத்திலுள்ள எண் ணெய் உற்பத்தித் தொழிலின் பெரும்பகுதி இவர் வசமாயிற்று. இவர் **மண்ணெண்ணெய் அரசர்** என்று பேரும் புகழும் பெற்றுர். இம்மண்ணெண்ணெய் அரசர் வள்ளல்களின் அரசராகவும் விளங்குகிறுர்.

இவர் சுமார் ஒரு கோடி ரூபாய் செலவு செய்து **சிகாகோ** நகரத்தில் **சர்வதேசமாணவர் நிலய**மொன்றை அமைத்திருக்கிறார். இந்நிலயத்தில் பல தேசங்களைச் சேர்ந்த 500 மாணுக்கர்களும் மாணுக்கியர்களும் ஒருவரோடொருவர் நெருங்கிப் பழகி உயர்தரக் கலைகளைக் கற்றுக் கொள்ளலாம். இவ்விதமாகப் பலதேசங்களின் எதிர்காலப் பிரஜைகளும் நெருங் கிப் பழகுவதனால் எதிர்கால உலகில் அமைதியும் சமாதானமும் நிலவக்கூடுமென்பது ராக்பெல்லரின் கருத்து.

சர்வதேச மாணவர் நிலயம் மிகவும் வசீகரமான தோற்றமுடையதாக அமைக்கப் பட்டிருக்கிறது. அங்கே உணவுப் பொருள்களெல்லாம் மிகவும் மலி வான விலைக்கு மாணவர்களுக்குக் கொடுக்கப்படு கின்றன. இந்நிலயத்தில் பொழுதுபோக்கு மண்டப மொன்றும் அழகாக அமைந்துளது. இம்மண்டபத் தில் சகல தேச மாணுக்கர்களும் மாணுக்கியர்களும் உல்லாசமாகப் பொழுதுபோக்குவதும் பிரசங்கங்கள் செய்வதும் ஒன்றுகக்கூடி விருந்துண்பதுமுண்டு. இம்மண்டபத்துக்கருகே ஒருபுத்தகசாலையிருக்கிறது; நாட்டியம் செய்வதற்கும் நாடகங்களை நடித்துக் காட்டுவதற்கும் பிரத்தியேகமான வசதிகளுமிருக் கின்றன. ஆங்கிலேய மாணவர்கள் கவிச் சக்கர வர்த்தியான ஷேக்ஸ்பியரின் நாடகங்களிலொன்றை யும், இந்திய மாணவர்கள் இந்திய ஷேக்ஸ்பியரான காளிதாச மகாகவியின் நாடகங்களிலொன்றையும், சீனர்கள் தங்கள் நாட்டின் நாடக ஆசிரியர் இயற்றிய

நாடகங்களிலொன்றையும் திறமையாக நடித்துக் காட்டுவார்கள். இவ்விதமாகப் பழகும் மாணுக்கர்கள் பல நாடுகளின் மனப் பண்புகளையும் பழக்க வழக்கங்களையும் நாகரிகப் போக்கையும் நன்கறிந்து கொள்ளுகின்றனர். இத்தகைய அறநிலயங்களை அமைத்துதவும் ராக்பெல்லர் உலகம் போற்றும் உத்தமர்களிலொருவரல்லவா?

---

## 5. பத்திரிகைகள்

அமெரிக்க ஐக்கிய நாட்டில் பத்திரிகைத் தொழில் அபிவிருத்தி யடைந்திருப்பதைப் போல வேறு எந்நாட்டிலும் அபிவிருத்தி யடையவில்லை யென்று துணிந்து கூறலாம். பத்திரிகைத் தொழிலைக் கைக்கொள்ளுவதால் நாட்டிற்குச் சிறந்த முறையில் தொண்டு செய்யலாமென்ற அபிப்பிராயம் அமெரிக்கர்களுக் குண்டு. அமெரிக்கப் பத்திரிகைகளில் உலக நிகழ்ச்சிகளைப் பற்றிய செய்திகளும் விகடத் துணுக்குகளும் நாகரிகக் குறிப்புக்களும் படக்காட்சி விவரங்களும் நாணயமாற்று விகிதங்களும் இலக்கியம் இரசாயனம் பௌதிக சாஸ்திர ஆராய்ச்சி முதலியவற்றைக் குறிக்கும் அரிய கட்டுரைகளும் விசேஷமாகக் காணப்படுகின்றன. அந்நிய நாடுகளின் அரசியல் நிலைமையையும் அமெரிக்கப் பத்திரிகைகள் பொது ஜனங்களுக்கு அவ்வப்போது அறிவிக்கின்றன.

அமெரிக்க ஐக்கிய நாட்டிலும் ஐரோப்பிய நாட்டிலுமுள்ள மக்கள் உலகத்திலுள்ள பல வேறு

நாடுகளின் நிலைமையைப் பற்றிய ருசிகரமான விஷயங்களை அறிந்து கொள்ளுவதற்குப் பேராவல் உள்ளவர்களாக விருக்கின்றனர். பகல் முழுவதும் உழைத்துவரும் தொழிலாளர்கள் கூட இரவில் பத்திரிகைகளைப்படித்துப் பல விஷயங்களையும் தெரிந்து கொள்ள விரும்புகின்றனர். சிறு குழந்தைகளும் படங்கள் பார்த்து இன்புறும்பொருட்டுப் பத்திரிகைகளைப் புரட்டுகின்றன. வர்த்தகக் கழகத்தினர் தங்களுடைய வர்த்தகத் தொழிலை அபிவிருத்தி செய்யும் பொருட்டுப் பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்கின்றனர். வேலை தேடுபவர்களும் பத்திரிகையின் வாயிலாக வேலை கிடைக்குமிடங்களைத் தெரிந்துகொள்ளுகின்றனர். பிரபல நூலாசிரியர்களும் அரசியல் நிபுணர்களும் பத்திரிகைகள் தங்கள் நூல்களுக்கும் செயல்களுக்கும் அளிக்கும் மதிப்புரைகளை ஆவலோடு எதிர் நோக்குகின்றனர்.

கட்டுரையாளர்கள், படங்கள் தயாரிப்பவர்கள், விளம்பரஞ் சேகரிப்பவர்கள், செய்திகள் அனுப்புகிறவர்கள், அச்சிடுபவர்கள் ஆகியோரின் ஒத்துழைப்பினுலேயே தற்கால உலகில் பத்திரிகைத் தொழில் மிகவும் சிறப்பாக நடைபெறுகின்றது. செய்திகளைத் துரிதமாகப் பரப்புவதும், மதத்துவேஷமான கொள்கைகளையும் வேறு அநாவசியமான விஷயங்களையும் வெளியிட மறுப்பதும், பத்திரிகைகளின் முதற்பெருங்கடனகு மென்பதைத் தற்கால அறிஞர்கள் நன்குணர்ந்துவருகின்றனர். இவர்கள் ஆயிரக்கணக்கான பத்திரிகைகளை விரைவாக அச்

சிடக்கூடிய இயந்திரங்களைக் கண்டுபிடித்திருப்ப தால், குறைந்த விலைக்குப் பத்திரிகைப் பிரதிகளை விற்பனைசெய்து செல்வத்தையும் செல்வாக்கையும் ஈட்டிக் கொள்ளுதல் சாத்தியமாகின்றது.

நவீன முறையில் அமைக்கப் பெற்றுள்ள பெரிய பத்திரிகாலயங்களில், செய்திகளைத் தொகுப் பதற்கும் கட்டுரைகள் வரைவதற்கும் தலையங்கங்கள் எழுதுவதற்கும் வேறு பத்திரிகைகளின் அபிப்பிரா யங்களைத் தொகுத்தெழுதுவதற்கும் விளம்பரங்களை ஒழுங்கு செய்வதற்கும் தனித்தனி ஊழியர்கள் நியமிக்கப் பெற்றிருக்கின்றனர். பத்திரிகைகளில் குற்றம் குறைகளேற்படாமல் பார்த்துக்கொள்ளும் பொறுப்பும் தலையங்கங்கள் எழுதும் பொறுப்பும் பெரும்பாலும் ஆசிரியர்களைச் சேர்ந்ததாகவே கருதப்படுகின்றன.

பத்திரிகாலயங்களின் தலைமை யதிகாரிகள் பத்திராசிரியர்களேயாவர். அவர்கள் தங்களுடைய பத்திரிகைகளில் வெளியிடுவதற்கென வந்திருக்கும் செய்திகள், கடிதங்கள், கட்டுரைகள், முதலியவற் றைப் பார்வையிடுகின்றனர். உலகநிகழ்ச்சிகளையும் அரசியற் கட்சித்தலைவர்களின் அபிப்பிராயங்களை யும் ஜாக்கிரதையாக வெளியிடவேண்டிய பொறுப் பும், முக்கிய நிகழ்ச்சிகளைப்பற்றி விசேஷக் குறிப் புக்கள் எழுதவேண்டிய பொறுப்பும் பத்திரிகாசிரி யர்களைச் சேர்ந்ததாக விருப்பதால், அவர்கள் கல்வி கேள்விகளில் தேர்ச்சி பெற்றவர்களாயிருப்பதோடு முதிர்ந்த அனுபவம் வாய்ந்தவர்களாகவு மிருக்க

வேண்டியது அவசியமாகும். அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள பத்திரிகாலயங்கள் ஒவ்வொன்றிலும் நிர்வாக ஆசிரியர், நகர ஆசிரியர், இலக்கிய ஆசிரியர் முதலிய பல பத்திராசிரியர்களிருக்கின்றனர்.

பத்திரிகைப் பிரதிநிதிகள் மிகவும் சுறுசுறுப்புள்ளவர்களாகவும் அரசாங்க அதிகாரிகளையும் பிரபலர்களான பிறரையும் பேட்டி கண்டு செய்திகள் சேகரிக்கும் ஆற்றல் வாய்ந்தவர்களாகவுமிருக்க வேண்டும். செய்திகளைச் சுருங்க எழுதி விளங்கவைக்கும் திறமையும் அவர்கள்பால் அமைந்திருக்கவேண்டும். அமெரிக்க ஐக்கிய நாட்டிலுள்ள பத்திரிகைப் பிரதிநிதிகளிற் பெரும்பாலார் மேற்கூறிய ஆற்றல்களோடு விசேஷ ஊக்கமும் உற்சாகமுமுள்ள இளைஞர்களாவர்.

நவீன முறையில் அமைக்கப்பெற்றுள்ள பத்திரிகாலயங்களில் அச்சுக்கோப்பதற்கும் பத்திரிகைகளை மடிப்பதற்கும் நவீன யந்திரங்கள் உபயோகிக்கப்படுகின்றன. மடிக்கப்பட்ட பத்திரிகைப் பிரதிகளை எடுத்துச் செல்ல மோட்டார் வாகனங்கள் பத்திரிகாலயங்கள் முன்பு தயாராயிருக்கின்றன. ருசிகரமான செய்திகளைத் தாங்கியதும் விலை குறைந்ததுமான பத்திரிகைகளையே பொது ஜனங்கள் விசேஷமாக வாங்குவதால், அத்தகைய பத்திரிகைகளைச் சித்திரப்படங்களுடனும் விசேஷ அனுபந்தங்களுடனும் வெளியிடுவது வழக்கம்.

அமெரிக்கப் பத்திரிகைகள், விளம்பர இலாகாவையே முக்கியமானதாக மதிக்கின்றன. பல்லாயிரக்

கணக்கான மக்கள் அற்பத்தொகை கொடுத்து வாங்கி வாசிக்கும் பத்திரிகைகளில் தங்கள் வியாபாரத்தை விளம்பரஞ்செய்து பெரும்பொருளீட்டலாமென்று வர்த்தகர்கள் கருதுவதால், அவர்கள் அப்பத்திரிகைகளில் விளம்பரஞ் செய்யத் தவறுவதேயில்லை. விளம்பர வருமானத்தைக் கொண்டே அமெரிக்கப் பத்திரிகைகள் லாபகரமான முறையில் நடைபெறுகின்றன. இத்தகைய பத்திரிகைகளால் மேலைத்தேசங்களிலுள்ள ஜனங்கள் உலகஅறிவைப் பெற்றுத் தங்கள் வாழ்க்கையை வளமுறச் செய்கின்றனர்.

நமது நாட்டினர் இப்பொழுதுதான் பத்திரிகையின் பெரும்பயனை உணர்ந்து வருகின்றனரென்னலாம். திரு. ஜி. சுப்பிரமணிய ஐயர் என்ற அறிஞர் தமது 23-வது வயதில் சில நண்பர்களை உதவியாகக் கொண்டு 1878-ம் வருஷம் செப்டம்பர் மாதம் 26-ம் தேதியன்று '**ஹிந்து**' பத்திரிகையை வாரப்பத்திரிகையாக நடத்தத் தொடங்கினர். இவ்வாறு அவர் செய்தற்குரிய காரணத்தை அறிந்து கொள்ளுவது அவசியமாகும். அந்நாளில் சென்னப் பட்டணத்தில் பிரஸிடென்ஸி மாஜிஸ்டிரேட்டாக விருந்த டி. முத்துசுவாமி ஐயரை உயர்தர நீதிபதியாக (ஹைகோர்ட் ஜட்ஜாக) நியமிக்க அரசினர் உத்தேசித்திருந்தனர். அவ்வுத்தேசத்தை ஒரு பத்திரிகை கண்டித்தெழுதியதைச் சகிக்காமல் தான் திருவாளர் சுப்பிரமணிய ஐயர் முதலானோர் ஹிந்து பத்திரிகையை நடத்த ஆரம்பித்தனர்.

ஹிந்துவின் முதற் பிரசுரத்தில் அறுபது பிரதிகளே அச்சிடப்பட்டன; இதனுல் சுமார் ஐம்பதாண்டுகளுக்கு முன் ஆங்கிலம் படித்த இந்தியர்களிலும் பத்திரிகை படிக்கவேண்டுமென்ற ஆவல் மிக மிகக் குறைவாகவே யிருந்ததென்பது நன்கு விளங்கும். குறித்த முதற் பிரசுரம் டி. முத்துசுவாமி ஐயரின் ஆற்றலையும் ஒழுக்கவன்மையையும் பாராட்டியதோடு அவரது நியமனத்தைக்கண்டித்தெழுதியிருந்த பத்திரிகையின் கொள்கையை மறுக்கவும் துணிந்ததால், அப்பத்திரிகையை நடத்த முற்பட்டுநின்ற இளைஞர்களுக்குப் பலஅறிவாளிகளும் தம்மாலியன்ற உதவிகளைச்செய்யவிரும்பினர். இத்தகைய ஹிந்து பத்திரிகை நாளடைவில் வளர்ந்து வளர்ந்து இப்பொழுது இந்தியாவிலுள்ள அதிமுக்கியமான பத்திரிகைகளில் ஒன்ருகத் திகழ்கின்றது.



ஜி. சுப்பிரமணிய அய்யர்

ஹிந்து பத்திரிகையை ஸ்தாபிப்பதற்கு மூல காரணராக விளங்கிய திரு. ஜி. சுப்பிரமணியஐயரே,

ஆங்கிலம் படியாதவர்களுக்கும் அரசியல் அறிவை யுண்டாக்க வேண்டுமென்று கருதி 1882-ம் ஆண்டில் **சுதேசமித்திரன்** என்ற தமிழ்ப் பத்திரிகையையும் வாரப் பிரசுரமாக ஆரம்பித்தார். நாளடைவில் சுதேசமித்திரன் வாரம் மும்முறையாக வெளியிடப்பட்டது. பிறகு அப்பத்திரிகை தினசரிப் பத்திரிகையாகித் தமிழ் நாட்டுக்குப் பெருந் தொண்டாற்றியது. இந்நாளில் சுதேசமித்திரனுடன் வேறு சில தமிழ்ப் பத்திரிகைகளும் நமது நாட்டிற்குப் பல வேறு துறைகளிலும் தொண்டாற்றி வருகின்றன. எனினும் பத்திரிகைத் தொழில் மேல்நாடுகளில் ஜனங்களின் பேராதரவு பெற்று நடைபெறுவதுபோல், நமது நாட்டில் இன்னும் நடைபெறவில்லை. மேல் நாடுகளில் பத்திரிகைகளுக்கு லட்சக் கணக்கான சந்தாதார்களிருக்கிறார்கள். நமது நாட்டில் எழுதப் படிக்கத் தெரியாதவர்களின் தொகை அதிகமாக விருப்பதால், பத்திரிகை வாசிப்பவரின் தொகை மிகவும் குறைவாகவே யிருக்கிறது. கல்வியறிவு நாடெங்கும் பரவுவதின் பயனாக, நமது நாட்டு நிலையையும் பிற நாடுகளின் நிலையையும் உள்ளங்கை நெல்லிக்கனிபோல் காட்டும் பத்திரிகைகளைப் படிப்பவர்களின் தொகையும் அதிகரிக்குமென்பது திண்ணம்.

———

## 6. உழைப்பும் தன்னம்பிக்கையும்

காலஞ்சென்ற அமெரிக்க விஞ்ஞான சாஸ்திர நிபுணரான எடிசனுடைய வெற்றியின் இரகசியத்தை நீங்கள் அறிந்துகொள்ள விரும்புகிறீர்களல்லவா? அதைக் குறித்து அவர் கூறுவது வருமாறு:—

"எனக்கு அதிர்ஷ்டத்தில் நம்பிக்கையே கிடையாது. அதிர்ஷ்டமென்ற ஒன்று இருக்குமானல் நான் உலகத்திலேயே பெருந் துரதிர்ஷ்டசாலியாகத்தானிருந்திருக்க வேண்டும். எனது வாழ்க்கையிலே ஒரு தடவைகூட அதிர்ஷ்டம் ஏற்பட்டதில்லை. எனக்குத் தேவையான ஒன்றைச் செய்ய நான் முயல்வேனுயின், எனக்குத் தேவையற்ற பலவும் ஒன்றின்பின் ஒன்ருகத் தென்படத் துவங்குகின்றன. எனக்குத் தேவையில்லாத தொண்ணூற்றென்பது பொருள்களைக் கண்டுபிடித்த பிறகு தான், நான் எதிர்பார்த்துக் கொண்டிருக்கும் நூருவது பொருள் எனக்குப் புலனுகின்றது. இது மிகவும் கடினமான அதிர்ஷ்டமல்லவா?

"உண்மையில் எனக்கு நல்ல அதிர்ஷ்டத்திலும் நம்பிக்கையில்லை; துரதிர்ஷ்டத்திலும் நம்பிக்கையில்லையென்று உங்களுக்குச் சொல்லி விடுகிறேன். பல மனிதர்கள் சில விஷயங்களைக் கண்டுபிடிக்க முயன்று பின்னல் விட்டுவிடுகிருர்கள். நானே எதைக் குறித்து முயற்சி செய்கிறேனே அது கிடைக்கும் வரையில் ஒருபொழுதும் பின் வாங்குவதில்லை. அதிர்ஷ்டசாலி யென்று நினைக்கப்படும் எனக்கும் துரதிர்ஷ்டசாலிகளென்று தங்களை நினைத்துக்

கொள்ளும் மனிதர்களுக்குமுள்ள வித்தியாசம் இது தான். எனக்கு ஏதோ அசாதாரணமான சக்தி யிருப்பதனுலேயே நான் செய்துள்ள காரியங்கள் என்னு லியன்றிருக்கின்றன வென்று பலர் நினைத் துக் கொண்டிருக்கிறார்கள். அது உண்மையன்று; புத்திசாலியான எந்த மனிதனும் நான்செய்துள்ள காரியங்களைச் செய்ய முடியும். ஆனால், பிடிவாதமாக அவன் எடுத்த காரியத்தில் ஈடுபடவேண்டும்; நமக் குத் திருப்தியுண்டாவதற்காக, நல்லதெதுவும் தானாக உதயமாகி விடாது என்பதையும் அவன் நினைவு கூர் தல்வேண்டும். நாமே அதை உதயமாகும்படி செய்ய வேண்டும். **மேதாவித் தன்மை** யென்பது நூற்றுக்கு ஒருபங்கு **அருளும்**, தொண்ணூற்றென்பது பங்கு வியர்வை சொட்டப் புரியும் **உழைப்புமே** யாகும்.''

நமது அதிர்ஷ்டத்தின் பெரும் பகுதியையும் உருவாக்கும் உழைப்பிற்குப் பெரும் பொறுமையும் விசேஷமான தன்னம்பிக்கையும் இன்றியமையாத ஊன்றுகோ லாகின்றன. எடிசனைப் போன்ற பேராற்றல் வாய்ந்த நிபுணர்களின் சரித்திரங்களை யும் வீரபுருஷர் வீரப் பெண்மணிகள் வரலாறுகளை யும் கருத்தூன்றிக் கற்போமாயின், அவர்கள் எவ் விதமாக வாழ்க்கையில் வெற்றி யடைந்தனரென் பது இனிது புலனாகும். வெற்றிவீரர்களான சிவாஜி, நெப்போலியன், குரு கோவிந்தஸிங் முதலியவர் களும் பிரபல விஞ்ஞானக் கலைஞரும், ஒப்பற்ற தன் னம்பிக்கை, எத்தகைய இடையூறுகளுக்கும் சலி யாத பொறுமை, தளராத ஊக்கத்தோடும் உற்சா

கத்தோடும் கூடிய பேருழைப்பு ஆகிய மூன்று அம்சங்களைக் கொண்டே தங்கள் நல்லதிர்ஷ்டத்தைப் படைத்துக் கொண்டனரென்று நாம் தெளிவாக அறிந்து கொள்ளலாம். இவ் வீரர்களும் அறிஞர்களும் தங்கள் வாழ்க்கையில் பற்பல இன்னல்களை எதிர்த்துப் போராடினரெனினும் தங்கள் லட்சியத்தினின்றும் ஒரு சிறிதும் விலகிச் செல்லவில்லை.

"அஞ்சுவது யாதொன்றுமில்லை; அஞ்சவருவதுமில்லை" என்னும் மனவுறுதி இவர்களுக்குத் தன்னம்பிக்கையின் பயனுகவே ஏற்பட்ட தென்னலாம். தன்னை நம்பாதவன் பிறரை நம்புவதெங்ஙனம்; கடவுளைத்தான் நம்புவதெங்ஙனம்? 'தனக்கு நண்பனுயிருப்பவன் பிறருக்கும் நண்பனுவா'னென்று மேலைநாட்டினருள் ஒரு பழமொழியுண்டு. தன்னம்பிக்கை வாய்ந்தவனே தனக்கும் நண்பனுகிப் பிறர்க்கும் நண்பனுவான். நல்லதிர்ஷ்டமென்னும் கட்டடத்தின் அடிப்படையாக அமைவது தன்னம்பிக்கையேயாகும். 'தன்னை உயர்த்துவோனும் தானே, தாழ்த்துவோனும் தானே!' என்று நம்பிப் பொறுமையோடு உழைத்துக்கொண்டேயிருப்பவர் கல்விகேள்விகளிலும் இயற்கை யறிவாற்றல்களிலும் குறைந்தவராயினும், தாங்கள் விரும்பும் பதவிகளை யடைந்தின்புறக்கூடும்.

"சிலகாலம் எல்லாரையும் ஏமாற்றலாம்; சிலரை எல்லாக் காலமும் ஏமாற்றலாம்; ஆனுல் எல்லாரையும் எல்லாக்காலத்திலும் ஏமாற்ற முடியாது" என்று அமெரிக்க ஜனுதிபதிகளி லொருவராக விருந்த ஆப்ர

ஹாம் லிங்கன் கூறினர். ஆயினும் நம்மை நாமே ஒரு போதும் ஏமாற்றிக்கொள்ள முடியாதென்பதை நன்ருக உள்ளத்தில் பதிய வைத்துக்கொள்ள வேண்டும். நாம் அடைய விரும்பும் பதவிக்குத் தன்னம்பிக்கையினுலும், உழைப்பினுலும், பொறுமையினுலும் நம்மைத் தகுதியுடையவர்களாக்கிக் கொள்ளவேண்டும்.

தளபதி உல்ப் என்ற வீரன் ஒரு யுத்தத்திற்குச் செல்லுமுன் ஆங்கில மந்திரியான பிட் என்பவரோடு உரையாடிக் கொண்டிருந்தான். அவ்வீரன்பால் தன்னம்பிக்கை அளவுகடந்து பொங்கியது. அவன் தனதுவாளையுருவிச் சுழற்றிப் பேராண்மைதோன்ற உரத்த குரலில் கம்பீரமாகத் தன்னுலாகும் செயற்கருஞ் செயல்களை எடுத்துரைத்தான். இது தற்பெருமையாகுமென்று கருதிய மந்திரியார் 'ஆண்டவனே! இந்நாட்டின் விதியை இப்படிப்பட்டவர்களிடத்திலா ஒப்புவிக்க வேண்டும்?' என்று ஒரு நண்பரிடம் பரிகாசமாகப் பேசினர். இத்தகைய தளபதி, தான் சுரநோயுற்றிருந்தும், வீராவேசத்தோடு படுக்கையினின்றும் எழுந்து தன் படைகளை நடத்திச் சென்று வெற்றிசூடி மீண்டான். முதற்கண் தற்பெருமையெனத் தாம் கருதியது தன்னம்பிக்கையின் தடிப்பேயென்பது பிட் மந்திரியாருக்குப் பின்னர் வெளிப்பட்டது. 'குரைக்கும் நாய் கடியாது' என்பது உண்மைதான்; எனினும் அது உறங்கும் சிங்கத்தினும் பலவழிகளில் பயன் தருவதன்ருே?

ஆனல் தன்னம்பிக்கையென்பது எப்போதும் ஆரவாரம் செய்வதன்று. "கிராட்டன் என்ற பெரி

யார் தம்மைப்பற்றி யென்ன சொல்லுகிறார்?'' என்று கேட்ட ஒரு பிரபுவுக்கு, "அவர் தம்மைப்பற்றி ஒன்றும் கூறிக்கொள்ளவில்லை. சித்திரவதை செய்யினும் தம்மைப் புகழ்ந்துபேசும் ஒரு வார்த்தையை யாவது அவரிடமிருந்து பெறமுடியாது. அவர் தமது புகழின் வலிமையினை நன்கறிவார்.'' என்று அவரது நண்பரொருவர் பதிலிறுத்தார். இத்தகைய பெரியோர்கள் பெரும் பொறுமையோடு பெரும் பணிவினையும் மேற்கொண்டொழுகுகின்றார்கள். இவர்களது தன்னம்பிக்கை சொல்லில் வெளிப்படாது, செயற்றிறனாகவும் பேருழைப்பாகவும் பொங்கி வெளிப்படுகின்றது.

**ஜூலியஸ் ஸீஸர்** என்ற ரோமை நாட்டுவீரர் கடல் யாத்திரை செய்துகொண்டிருந்தபோது, அவரது கப்பல் பெரும்புயலில் சிக்கிக்கொண்டது. மாலுமி கவலைகொண்டு விழித்தான். அச்சமயம் ஸீஸர் அவனை நோக்கி, "அஞ்சாதே; நீ ஸீஸரையும் அவரது நல்லதிர்ஷ்டத்தையும் தாங்கிச் செல்லுகிறாய்; உனக்குக் கவலையேன்?'' என்று கூறினார். இத்தகைய தன்னம்பிக்கை ஸீஸருக்குப் பல போர்களிலும் வெற்றியளித்து அவனைப் பெருவீரனாக்கியது.

கோட்டையை இழந்த ஒரு வீரனை எதிரிகள் பிடித்துக்கொண்டு, 'இப்போது உன் அரண் எங்கே சொல், பார்ப்போம்?' என்று உறுமியபோது, அவன் தன் நெஞ்சின்மீது கைவைத்துக்கொண்டு 'இதோ என் அரண் இருக்கிறது!' என்று இறுமாந்து கூறினனாம். இவ்வீரனது தன்னம்பிக்கை யுணர்வு வீண் பெருமையாகாது; இது செயற் கருஞ்செயல்களையும்

செய்யும்படி மனிதனைத் தூண்டுகிறது; பல நெருக்கடியான சந்தர்ப்பங்களிலும் அவனைக் காப்பாற்றி உயர்வடையச் செய்கிறது.

ஒருவன் தனது நிலையை நன்கறிந்து கொண்டால், தான் எவ்வித நிலையை இனி அடையவேண்டுமென்பதை விரைவில் அறிந்து கொள்ளுவான். பணிவு ஒருவனுக்கு இன்றியமையாததே; எனினும் பணிவைப்போல் தன்னம்பிக்கையும் இன்றியமையாததே யாகும். இடைவிடா உழைப்பிற்கும் அளவு கடந்த பொறுமைக்கும் தன்னம்பிக்கை அருந்துணையாக அமைந்துதவுகின்றது. ஒருவனிடம் விசேஷமான தன்னம்பிக்கையும், தன்னம்பிக்கையைப் போல் பொறுமையும், பொறுமையைப்போல் உழைப்பும் அமையுமாயின், அவன் வாழ்க்கையில் வெற்றியடைந்து பிறரால் உயர்ந்த அதிர்ஷ்டசாலி யென்று மதிக்கப்படுவானென்பது திண்ணம்.

---

## 7. ஊன்றி உணர்தற்குரிய உண்மைகள்

நாமே நமக்குத் துணையானால்
நாடும் பொருளும் நற்புகழும்
தாமே நம்மைத் தேடிவரும்
சற்றும் இதற்கோர் ஐயமுண்டோ! 1.

நெஞ்சிற் கருணை நிறைந்தவர்க்கு
நேயம் கொண்ட நெறியோர்க்கு
விஞ்சும் பொறுமை யுடையவர்க்கு
வெல்லும் படைகள் வேறுளவோ? 2.

உள்ளந் தேறிச் செய்வினையில்
ஊக்கம் பெருக உழைப்போமேல்
பள்ளம் உயர்மே டாகாதோ
பாறை பொடியாய்ப் போகாதோ? 3.

வாட்டும் உலகில் வழுத்தரிய
வாழ்க்கைத் துணையாம் மங்கையரை
ஆட்டும் பொம்மை அடிமைகளாய்
ஆக்கி வைப்ப தழகாமோ? 4.

கால நதியின் கதியதனில்
கடவு ளாணை காண்பீரேல்
ஞால மீது சுகமெல்லா
நாளு மடைந்து வாழ்வீரே. 5.

—தேசிக விநாயகம் பிள்ளை.

## 8. சீக்கியர்கள்

இந்தியாவிலுள்ள முக்கியமான சமூகங்களில் சீக்கிய சமூகமொன்றாகும். வீரமும், ஊக்கமும், கட்டுப்பாடும் வாய்ந்த இச்சமூகத்தினர் பஞ்சாப் என்ற மாகாணத்தில் மட்டுமே விசேஷமாகக் காணப்பட்ட போதிலும் இந்திய அரசியலில் இவர்கள் மிகவும் முக்கியமான ஒரு ஸ்தானத்தை வகித்து வருகின்றனர். இவர்கள் வசித்துவரும் பிரதேசம் சுமார் 800 ஆண்டுகளாக மகம்மதியர்களின் ஆட்சிக்குள் அடங்கியிருந்தது. நமது தேசத்தின்மீது படையெடுத்து வந்த மகமதியர்கள் பெரும்பாலும் பஞ்சாப் வழியாகவே வந்தார்கள். அவர்களது படையெடுப்பின் பயனாக, முதல் முதல் இந்துக்களுக்கும் மகமதியர்க

ளுக்கு மிடையே பெருஞ்சண்டைகள் விளைந்தபோதி லும், நாளடைவில் இருதிறத்தினரும் சகோதரர்கள் போலப் பழகத் தொடங்கினரென்றும், இருசமயத் தினரும் கலந்து சில பண்டிகைகளைக் கூட அநுஷ் டித்து வந்தனரென்றும் **குலாம் ஹூஸேன்** என்ற மக மதிய பண்டிதர் கூறியுள்ளார். இத்தகைய ஒற்று மையின் தனிப்பெரும் பயனாக விளைந்த மதமே சீக்கி யர்களின் மதமாகும்.

இம்மதத்தை ஸ்தாபித்த பெரியார் **ஸ்ரீகுரு நானக் தேவர்** என்பவர். இவர் லாகூருக்கு முப்பது மைல் தூரத்திலுள்ள **தால்வந்தி** கிராமத்தில் ஒரு க்ஷத்திரிய குடும்பத்தில் கி. பி. 1469-ஆம் ஆண்டில் பிறந்தார். இவரது தந்தையார் ஒரு சிறு உத்தியோகம் பார்த்து வந்தார்; இவரது தாய் இவர்மீது பேரன்பு கொண்டு இவரைச் சீராட்டி வளர்த்துவந்தாள். இவர் தமது பதினைன்காவது வயதில் விவாகம் செய்துகொண்டன ரென்றும், இவருக்கு இரண்டு குழந்தைகள் பிறந் தனவென்றும் சொல்லுகிறார்கள். இளமையிலேயே இவர் இயற்கை நுண்ணறிவு வாய்ந்தவராகவும் பக்தி யுணர்ச்சி யுள்ளவராகவு மிருந்தார். அடிக்கடி துறவிகளோடு நெருங்கிப் பழகிவந்ததால், விவசா யம், தொழில் முயற்சி முதலிய லௌகிக விஷயங்க ளில் இவருள்ளம் ஈடுபடவில்லை.

தமது ஐந்தாவது வயதிலேயே நானக் கடவுள் மீது தோத்திரப்பாடல்களை இயற்றத் தொடங்கின ராம். இவரது ஏழாவது பிராயத்தில் இவருக்குக் கல்வி கற்பிக்க இயைந்த ஆசானை நோக்கி,

"தன்னலத்தைச் சுட்டுச் சாம்பராக்கி அதைக் கரைத்து மையாக்கி உன் இதயத்தை எழுதும் தாளாக்கிக் கொள்;

தெய்வ பக்தியை எழுது கோலாக்கி, உன் மனச்சான்றை எழுதுவோனுக்கிக் கொள்;

மேலுலகிலிருந்து கிடைக்கும் ஆணைகளை எழுதி மனனஞ்செய்து கொள்;

ஆண்டவன் பெயரை எழுது; அவர் புகழை எழுது; அவர் எல்லையற்றவ ரென்றெழுது.

நண்பா, இவ்விதம் எழுது; உன் கணக்கைப் பார்க்கும்போது, இதுவே சரியான கணக்காகக் காணப்படும்."

என்ற கருத்தமைந்த பாசுரமொன்றைப் பாடினராம். இவர் சிறிது காலத்திற்குள் பஞ்சாபி பாஷையையும் பாரசீக மொழியையும் கற்றுத் தேர்ந்தார்.

பிறகு இவரது பெற்ரேர் இவரிடம் சிறிது பணத்தைக் கொடுத்துச் சரியான தொழில் முயற்சியில் உபயோகித்துக் கொள்ளும்படி சொன்னர்கள். இவரோ ஊருக்கு வெளியில் வறுமையுற்று வாடி மெலிந்திருந்த சிலரைக் கண்டு இரங்கி அவர்களுக்கு ஆகாரமளிப்பதில் அப்பொருளைச் செலவிட்டுப் பெற்ரேரிடம் திரும்பிவந்து, தாம் செய்ததுதான் உண்மையான தொழில் என்று கூறினர். எனினும் தமது பெற்ரேரது வற்புறுத்தலுக்கிணங்கி இவர் ஒரு மகமதிய அதிகாரியிடம் சிறிதுகாலம் வேலை பார்த்து வந்தார்.

இவரைப்பற்றிப் பல கதைகள் வழங்குகின்றன. இவர் பூரி, கயா, காசி, ஹரித்துவாரம், பிருந்தாவனம் முதலிய இந்து ஸ்தலங்களுக்கும் மெக்கா, மெடினு முதலிய முஸ்லீம் புண்ணிய ஸ்தலங்களுக்கும் யாத்திரை செய்தபின், சீக்கிய மதத்தை உபதேசிக்கத் தொடங்கினர். இந்துமதம் மகமதியமதம் ஆகிய இரண்டு மதங்களையும் சமரசப்படுத்தி அவ்விரண்டிலுமுள்ள மேலான தத்துவங்களை வற்புறுத்துவதே இம்மதஸ்தாபகரின் ஆதி நோக்கமாகும். புரோகிதர்களையும் பூஜா விதிகளையும் விலக்கி ஆண்டவனிடத்தில் உள்ளத்தை உரிமையாக்குவதே மேலான நெறியென்பது இவரது சாரமான கொள்கை. இப்பெரியார் கி. பி. 1538-ம் ஆண்டில் பூதவுடலை நீத்தார்.

சீக்கிய சமயம் சிறிது சிறிதாகப் பரவத்தொடங்கியது. நானக் தேவருக்குப் பின் வந்த குருமார்களும் ஆதிகுருவைப்போலவே சிறந்த குணங்களுள்ளவர்களாகவும் அசையாத மனவுறுதியுள்ளவர்களாகவு மிருந்தார்கள். ஐந்தாவது குருவான அர்ச்சுனதேவர் எல்லா வகுப்பினரையும் தொழிலாளிகளையும் சமமாகப் பாவித்தார். **'கிரந்தசாஹேப்'** என்ற பெயர்வாய்ந்த சீக்கியர்களின் வேதப் புத்தகம் இக்குருவால் தொகுக்கப் பெற்றதேயாகும். இக்குருவின் கால முதல், சீக்கியர்களுக்கும் மகமதிய அரசர்களுக்கும் கடுமையான போராட்டம் ஏற்பட்டது. டில்லியிலிருந்த மொகலாய சக்கரவர்த்தியான ஜிஹாங்கீரின் ஆணையால் குரு அர்ச்சுனதேவர்

கொல்லப்பட்டார்; சீக்கியர்களிற் பலரும் வதஞ் செய்யப்பட்டனர்.

குருமார்களின் சீடர்களாகவிருந்த சீக்கியர்கள், 'சிங்கம்' என்று பொருள்படும் '**ஸிங்**' என்ற பட்டத்தோடு போர்க்கோலம் பூண்டு சக்திவாய்ந்த ஒரு ராணுவ சமூகமாக விளங்கவேண்டுமென்பது பத்தாவது குருவாகிய குருகோவிந்தரின் கருத்து. இவரே சீக்கியர்களின் கடைசியான குரு. இவர் காலத்தில் டில்லியில் **அவுரங்கசீப்** என்னும் மொகல் பாதுஷா ஆட்சி செலுத்திவந்தார். இவர் ஆட்சியில் மகமதியரல்லாதார் பெருந்துன்பங்களுக்கு உட்படுத்தப் பட்டனர்; குரு கோவிந்தரின் தந்தையும் ஒன்பதாவது குருவுமான குரு தேக்பகதூர் என்பவரும் பாதுஷாவின் ஆணையால் மரணதண்டனை விதிக்கப்பட்டு, டில்லியில் உயிர் துறந்தார். இதன் பின்னரே குரு கோவிந்த ஸிங் சீக்கியர்களுக்குப் போர்ப் பயிற்சியளித்து, '**கால்ஸா**' என்னும் புதிய சீக்கியக்கூட்டத்தை ஸ்தாபித்தார்.

குரு கோவிந்தஸிங் ஸ்தாபித்த **கால்ஸா** கோஷ்டியினர் தொகையில் நாளுக்கு நாள் அதிகரித்து வந்தனர். சீக்கியர்கள் சிறிது காலத்தில் பஞ்சாப் முழுவதையும் ஆளும் பதவியை யடைந்ததற்கும், இன்றளவும் நமது தேசத்திலே படைத்தொழிலிற் சிறந்த சமூகத்தினரில் அவர்கள் முக்கியமானவர்களாகக் கருதப் படுவதற்கும், அடிப்படை யமைத்தவர் குரு கோவிந்த சிங்கரேயாவர்.

சீக்கியர்கள் பல கூட்டங்களாகப் பிரிந்து ஒவ்

வொரு கூட்டத்திற்கும் ஒவ்வொரு 'ஸர்தார்' ஏற்படுத்திக் கொண்டனர். இந்த ஸர்தார்களில் ஒருவரது குமாரரான **ரணஜித்ஸிங்** தமது மனேதைரியத்தாலும் புத்திக் கூர்மையாலும் ஸர்தார்களுக் கெல்லாம் முதல்வராகிப் பலபோர்களில் வெற்றிபெற்றுப் பஞ்சாப் மாகாணத்தில் சீக்கியர் ஆட்சியை நிலைநிறுத்தி **மகாராஜா ரணஜித்ஸிங்** என்ற பெயரும் புகழும் பெற்று விளங்கினர். **ஸர்தார்** என்னும் பட்டம் நந் தென்னட்டில் அளிக்கப்பட்டுவந்த **'நாட்டாண்மைக்காரர்'** என்ற பட்டத்தை யொத்ததேயாகும். இத்தகைய சாமானிய நிலையிலிருந்தவரது புதல்வராகத் தோன்றிய ரணஜித்ஸிங் சிறு வயதிலிருந்தே போர் செய்வதில் விருப்பமுள்ளவராக விருந்தார். அந்நாளில் டில்லியிலிருந்த



மகாராஜா ரணஜித் ஸிங்

மொகலாய சக்கரவர்த்தியின் பலங் குன்றிப் போயிருந்ததால், ஆப்கானிஸ்தானத்துப் பட்டாணிய அரசர்களே பஞ்சாப் மாகாணத்தைக் கைப்பற்றி அதன் மீது ஆட்சிபுரிந்து வந்தனர். இவர்களிடமிருந்தே ரணஜித்ஸிங் பஞ்சாப் மாகாணத்தின் பல பகுதிகளையும் சிறிதுசிறிதாகவென்று நாளடைவில் தமது ஆட்சியை உறுதியாக ஸ்தாபித்துக்கொண்டார்.

இவர் பஞ்சாப் முழுவதையும் ஜயித்தது மன்றி, அதன் எல்லைக்கு வெளிப்புறத்திலிருக்கும் மலைப் பட்டாணியர்களது நாட்டையும் காஷ்மீர் தேசத்தையும் வென்று தமது ஆட்சிக்குள் அடக்கிவைத்தார். இவர், ஜாதிமத வேற்றுமைகள் கருதாராய் இந்துக்களையும் மகமதியர்களையும்ஒருங்கே ஆதரித்து மிகவும் நீதியுடன் அரசுசெலுத்தி வந்தார். ஒரு சமயம் ஓரேழைக்குத் தானமாகக் கொடுத்த தானிய மூட்டையை அவனால் தூக்க முடியாதது கண்டு, தாமே அதைத் தலையின்மீது சுமந்து அவன் வீட்டிற் சேர்த்தனராம். இவரைப் **பஞ்சாப் சிங்க**மென்றுகூறுவதுண்டு. இவர் 40 வருஷ காலம் ஆண்டு 1839-ல் காலஞ் சென்றார்.

இவர் காலத்திற்குப் பிறகுதான் சீக்கியர்களுக்கும் கிழக்கிந்தியக் கம்பெனியாருக்கும் யுத்தங்கள் ஏற்பட்டன; இந்த யுத்தங்களின் பயனாக, 1849-ம் வருஷத்தில் பஞ்சாப் முழுமையும் கிழக்கிந்தியக் கம்பெனியின் ஆட்சிக்குட்பட்டது. பின்னர், சீக்கியர்களிற் பலர் ஆங்கிலேய ராணுவத்திற் சேர்ந்து கொண்டனர்; இன்றளவும் இவர்கள் அந்த ராணுவத்தில்சிறந்த போர்வீரர்களாயிருந்து வருகிறார்கள்.

சீக்கியர்களின் 'கிரந்த சாஹேப்,' தோத்திரம், கீர்த்தனம் முதலியவையெல்லாம் பஞ்சாபி பாஷையில் எழுதப்பட்டிருக்கின்றன. **அமிர்தசரஸ்** என்ற ஸ்தலம் இவர்களது முக்கிய க்ஷேத்திரமாகவும் அவ்வூரிலுள்ள '**பொற்கோவில்**' என்ற கோவில் இவர்களது முக்கிய கோவிலாகவு மிருக்கின்றன. தங்கமுலாம்

பூசிய தகடுகள் வேயப் பெற்றிருப்பதால் இக் கோவில் பொற்கோவிலென்று பெயர்பெறுகின்றது. முக்கியமாகப் பஞ்சாபிலும், சிறுபான்மை ஐக்கிய மாகாணம், பேகார், கீழ் வங்காளம் முதலான மாகாணங்களிலும் சீக்கியர்களின் கோவில்கள் காணப் படுகின்றன. இக் கோவில்களைக் குருத் துவாரங் களென்று சொல்லுகிறார்கள். எல்லாக் குருத் துவா ரங்களிலும் 'கிரந்த சாஹேப்' வைக்கப்பட்டி ருக்கும்; இதைத் தவிர விக்கிரஹங்கள் முதலியவை காணப்படுவதில்லை. பிரபலமான குருத்துவாரங்கள் பழைய குருக்களுள் யாராவது ஒருவரால் ஏற்படுத் தப்பட்டவையாகவிருக்கும்.

---

## 9. ரேடியமும் அதனைக் கண்டுபிடித்தோரும்

ரேடியமென்றால் என்ன வென்பதைக் குறித் தும், அதன் உபயோகங்களெவை யென்பதைக் குறித்தும், அதைக் கண்டுபிடித்த பேரறிவாளர் களைக் குறித்தும் நாம் சில விஷயங்களையாவது அறி ந்து கொள்ளவேண்டிய தவசியமாகும். இன்று பௌதிக ரசாயன சாஸ்திரங்கள் அபிவிருத்தியடைந் திருக்கும் நிலையில், ரேடியமென்ற அரிய ரசாயனப் பொருள் அதிமுக்கியமானதாகக் கருதப்படுவதோடு, பலவகையான கைத்தொழில் முயற்சிகளுக்கும், வைத்திய முறைகளுக்கும், உயிர் நூலாராய்ச்சிக்குங் கூட உபயோகப்படுகின்றது.

ரேடியத்தின் கிரணங்கள் உயிர்ச் சக்தியைத் தூண்டி வளர்ப்பதோடு, தாவரவர்க்கத்தின் வளர்ச்

சியையும் துரிதப்படுத்தும் ஆற்றல் வாய்ந்தன. சென்ற சில ஆண்டுகளாக ரேடியம் பிளவை முதலிய பலவகை நோய்களுக்குச் சிகிற்சை செய்வதற்காக உபயோகிக்கப்பட்டு வருவது பலரும் அறிந்ததே. இது அபூர்வமாகக் கிடைப்பதால், மிகவும் உயர்ந்த விலைக்கு விற்கப்படுகிறது; இக் காரணம் பற்றியே இதை வைத்திய முறைகளில் அதிகமாக உபயோகித்துக் கொள்ளுவது இயலாத தாகின்றது. சமீப எதிர் காலத்தில் இந்த ரசாயனப் பொருளைப் பல வகையான சிகிற்சைகளுக்கும் உபயோகிப்பதோடு, முதுமைப் பருவத்தைச் சிறிது காலமாவது விலக்கி ஆயுளை ஒருவாறு நீடிக்கச் செய்வதற்கும் பயன் படுத்திக் கொள்ளலாமென்று சிலர் நம்புகின்றனர்.

இதுவரை உலகத்திலேயே சுமார் ஐந்துதோலா எடை ரேடியம்தான் பிரித்தெடுக்கப்பட்டிருக்கிறதாம். 1904-ம் வருஷத்தில் ஒரு தோலா எடை ரேடியத்தின் விலை 45,000 பவுனுக விருந்ததென்றும், 1912-ம் வருஷத்தில் 5,50,000 பவுனுக விருந்ததென்றும், 1923-ல் 1,65,000 பவுனுக விருந்ததென்றும், 1928-ல் 1,32,000 பவுனுக விருந்ததென்றும் தெரிகிறது. இத்தகைய ரேடியத்தின் குணங்கள் வியக்கத் தக்கனவாக விருக்கின்றன. இது எப்பொழுதும்-இரவிலும்கூட-ஒளி வீசுகிறது; சுற்றுப்பக்கத்திலுள்ள உஷ்ணத்தைக் காட்டிலும் சிறிதுமேலான உஷ்ண நிலையிலிருக்கின்றது. இதனின்றும் மூன்றுவிதமான கிரணங்கள் வெளிப்பட்டுக் கொண்டே யிருக்கின்றன. இக்கிரணங்கள் ஆல்பா கிரணங்களென்றும்

**பீட்டா** கிரணங்களென்றும் **காமா** கிரணங்களென்றும் அழைக்கப்படுகின்றன. இக்கிரணங்கள் காந்த சக்தியால் பிரியும்போது ஆல்பா கிரணங்கள் இடப்புறமாகத் தள்ளப்படுகின்றன; பீட்டா கிரணங்கள் வலப்புறமாகத் தாழ்ந்து சாய்கின்றன. காமா கிரணங்கள் மட்டும்காந்த சக்தியினால் பாதிக்கப்பெறாமல் நேரே செல்லுகின்றன.

இந்த இரசாயனப் பொருளைக் கண்டுபிடித்து உலகத்திற் குதவியவர்கள் **க்யூரே** தம்பதிகளாவர். உண்மையில், ஸ்ரீமதி க்யூரே தான் ரேடியத்தைக் கண்டுபிடித்தவ ரென்னலாம். எனினும், அவ்வம்மையார் தம் கணவர் தமது பெருமுயற்சிக்கு அநுகூலமாகச் செய்த உதவியை வெளியிட வேண்டித் தாமும் அவரும் ரேடியத்தைக் கண்டு பிடித்ததாகக் கூறி வருகின்றார். இவரது கணவரான **பியரிக்யூரே** என்பவர் 1859-ம் ஆண்டில் பிறந்தார். பௌதிக சாஸ்திரத்தில் அவருக்கு விசேஷ விருப்ப மிருந்ததால், அவர் அதற் கடிப்படையாகக் கணித சாஸ்திரத்தில் கவனம்செலுத்தித் தேர்ச்சிபெற்றார். 1878-ம் ஆண்டில் அவர் பௌதிக சாஸ்திரத்தில் பட்டம் பெற்று 1882-ம் வருஷத்தில் ஒரு கலாமந்திரத்தில் தலைமை யாசிரியராக அமர்ந்தார். அப்பொழுது தமது ஆராய்ச்சித் துறையில் தமக்குதவி செய்யத் தக்க அறிவாற்றல்கள் வாய்ந்த வாழ்க்கைத் துணைவி கிடைத்தால், தமக்குப் பலவகையிலும் அநுகூலமாக விருக்குமென்று எண்ணினர். அவர் எண்ணியவாறு அவருக்கு வாய்த்த மனைவியாரே **ஸ்ரீமதி க்யூரே** யென்ற

உலகப் பிரசித்திபெற்ற பெண்மணியாவர்.

மணம் நிறைவேறுவதற்கு முன், இவ்வம்மையாரின் பெயர் **மேரி ஸ்க்லடவ்ஸ்கா** என்பது. இவர் 1867-ம் ஆண்டில் வார்ஸா நகரத்தில் ஒரு பௌதிக சாஸ்திர போதகாசிரியரின் புதல்வியாராகப் பிறந்தார். இவர் இளமையிலே தமது தந்தையாரது ஆராய்ச்சிச்சாலையில் அசுத்தமாகக் கிடந்த புட்டிகளையும் கண்ணாடிப் பாத்திரங்களையும் கழுவுவதையும், மறுநாள் ஆராய்ச்சிக்கு வேண்டிய சாமான்களைச் சேர்த்து வைப்பதையும் பொழுது போக்காகக் கொண்டிருந்தார். இவரது அறிவுத்திறனை வியந்து இவர் தந்தையார் இவருக்குப் பௌதிக சாஸ்திரத்தைப் போதித்து வந்தார். அந்நாளில் இவர்களது தாய்நாடாகிய போலந்தில் அரசியற் குழப்பங்களும் சச்சரவுகளும் ஏற்பட்டன. எனவே, **மேரி** அத்தகைய சச்சரவுகளில்லாத பாரிஸ் நகரத்தில் அமைதியாக விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சிபெறத் துணிந்து, அங்கே சென்று மற்றக் குழந்தைகளுக்குக் கல்வி கற்பித்தும், **ஸார்பான் பல்கலைக் கழகத்திலுள்ள** இரசாயன சாலையில் கருவிகளைக் கழுவி வைத்தும், தமக்குவேண்டிய சிறு தொகையைச் சம்பாதித்துக் கொண்டிருந்தார். இந்நிலையில் இவரது திறமையையும் அறிவுக் கூர்மையையும் கவனித்த பௌதிக சாஸ்திரியான **லிப்மான்** என்பவர் இவரை பியரிக்யூரேயிடம் உதவியாளாகச் சேர்த்து வைத்தார்.

இவ்விருவரும் மனமொத்துப் போனமையால், இல்லறம் நடத்தலாமென்று தீர்மானித்து 1895-ம்

ஆண்டில் மணஞ்செய்துகொண்டனர். அப்பொழுது பியரிக்யூரே 36 வயதுள்ளவராகவும், மேரி 28 வயதுள்ளவராகவு மிருந்தார்கள். தம்பதிகள் இருவரும் ஒருவருக்கொருவர் உண்மையான உதவியாளராக விருந்து காலங்கழித்தனர். கொஞ்சகாலம் சென்றபின், இவர்களுக்கு ஒரு குழந்தை பிறந்தது.

1896-ம் ஆண்டில் பியரி க்யூரேயோடு ஆசிரியராக விருந்த ஒருவர், **யூரேனியம்** என்னும் தாதுவோடு கூடிய இரசாயனப் பொருள்கள் **எக்ஸ்ரே** போலவே, சாதாரணமாக வெளிச்சம் செல்லக்கூடாத தடித்த வஸ்துக்கள் மூலமாக ஊடுருவிச் செல்லும் கிரணங்களை வெளிப்படுத்துகின்றன வென்று கண்டுபிடித்தார். இவ்விதமான பரிசீலனைகளில் ஈடுபட்ட மேரி க்யூரே, அல்லும் பகலுமாகப் பொறுமையுடன் பரிசீலனைசெய்து முடிவில் **பிஸ்பிலென்ட்** என்ற கனிப் பொருளிலிருந்து **பொலோனியம், ரேடியம்** என்ற இரண்டு சிறந்த தனிப்பொருள்கள் முறையே கொண்ட சேர்க்கைப் பொருள்களைப் பிரித்தெடுத்தார். இம்முயற்சியில் பியரிக்யூரேயும் தமது மனைவியாருக்குப் பேருதவி புரிந்து வந்தார்.

குறித்த தாதுக்கள் மற்றப் பொருள்களோடு கலந்திருக்கையில் நல்ல குணங்களை வெளியிட்ட போதிலும், தனித்திருக்குங்கால் ஆபத்து உண்டாக்கக் கூடியவை யென்பதை யறிந்ததும், பியரிக்யூரே தாமே அத்தாதுக்களைக் கையாண்டு மேரி குறிப்பிடும் பரிசீலனைகளைச் செய்வதென்று தீர்மானித்தார். இத்தகைய பரிசீலனைகளால் இவர் கைகள்

சுவாதீனமற்றுப்போயின; எனினும் தமது மனைவியாருக்கு ஒருவிதமான ஆபத்தும் ஏற்படக் கூடாதென்பதே இவரது பெருங் கவலையாக விருந்தது.

1903-ம் வருஷத்தில் க்யூரே தம்பதிகள் **கேல்வின் பிரபு** வென்ற ஆங்கிலேயப் பௌதிக சாஸ்திரியின் அழைப்பிற் கிணங்கி லண்டன்மா நகரஞ் சென்றார்கள். அங்கே **ராயல் ஸொஸைய்டி ஆப் ஸயன்ஸ்** என்ற சங்கத்தினர் மிக்க அருமைவாய்ந்த விஷயங்களைக் கண்டுபிடிப்போருக்கு அளிக்கப்படும் **டேவி மெடல்** என்ற பதக்கமொன்றை க்யூரே தம்பதிகளுக்களித்தனர். மேலும் சாஸ்திர உலகில் மிகப் பெரிய கௌரவமென்று கருதப்படும் **நோபல் வெகுமதியும்** பௌதிக சாஸ்திரச் சார்பாக **க்யூரே தம்பதிகளுக்கும்** அவர்களது நேசர் ஒருவருக்கும் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டது. பிறகு பியரி க்யூரேக்காக ஸார்பான் சர்வகலாசாலையில் ஓர் ஆராய்ச்சிச்சாலை பிரத்தியேகமாக ஏற்படுத்தப்பட்டது. அச்சாலைத் தலைவராக பியரிக்யூரே நியமிக்கப்பட்டார். இப்பொழுது அவர்களுக்கு வேறொரு குழந்தையும் பிறந்தது.

இங்ஙனம் தம்பதிகள் இருவரும் மனமுவந்த சாஸ்திர பரிசீலனை செய்துகொண்டு மகிழ்ச்சியுடன் வாழ்ந்து வந்த காலத்தில், ஒருநாள் பியரி க்யூரே தமது நண்பர்களுடன் விருந்துண்ணச் சென்றார். விருந்து நடைபெறுகையில் அவரும் அவரது நண்பர்களும் இதுவரை அவர் செய்து வந்த வேலையைக் குறித்தும் இனிச்செய்யவேண்டிய வேலைகளைக் குறித்தும் ஆலோசனை செய்தனர். பின்னர் நண்பர்க

ளிடம் விடை பெற்றுக்கொண்டு பியரி க்யூரே தமது உள்ளத்தில் பல புதிய எண்ணங்களுடன் வீட்டை நோக்கிப் புறப்பட்டார். ஜனநெருக்கமான ஒரு சாலையைக் குறுக்கே தாண்டிச் செல்லும்போது ஒரு மோட்டார் வண்டி வந்து மோதி அவரைத் தள்ளிக் கொன்றுவிட்டது.

இதைக்கேள்வியுற்றுத் துன்பக்கடலில் ஆழ்ந்த மேரி க்யூரே தமது கணவரின் ஞாபகத்தை என்றும் அழியாவண்ணம் நிலைநிறுத்த விரும்பி மேலும் மேலும் தொடர்ந்து ஆராய்ச்சிகள் செய்து வந்தார். இவர் கணவரது பதவியைக் கலாசாலை நிர்வாகிகள் இவருக்கே யளித்தார்கள். இவர் 1910-ல் ரேடியத்தைத் தனிப்படுத்தி அதன் குணதிசயங்களைக் குறித்து நூலொன்று வெளியிட்டார். 1911-ல் இரசாயன சாஸ்திரச் சார்பாக இரண்டாம் முறை நோபல் பரிசும் இவருக்கு அளிக்கப்பட்டது. ஆராய்ச்சித் துறையில் ஒரு மனப்பட்டு உலகத்திற்கு அரியதோர் தாதுவாகிய ரேடியத்தைக் கண்டுபிடித்து உதவிய க்யூரே தம்பதிகளின் புகழொளி என்றும் மங்காது நிலவுமென்பதில் ஐயமில்லை.

---

## 10. 'அன்பின் ஜோதி'

(இது பாரசீகப் பாஷையில் பாட்டாய் அமைந்துள்ள ஒரு கட்டுக் கதை; இதைத் தமிழில் எழுதியவர் ஸ்ரீமதி எம். லக்ஷ்மி அம்மாள் M.A., L.T. மேரி ராணி கலாசாலை.)

தூர தேசமாகிய இந்தியாவின் வடபாகத்தில், பஞ்சநதி பாயும் செழித்த பிரதேச மொன்றிருக்

கிறது. நீர்வளம், நிலவளம், மலைவளம் பொருந்திய அந்நாடு முன்னொருகாலத்தில் ஷாஜி என்ற சிற்றரச னாட்சிக்குட்பட்டிருந்தது. அவ்வரசன், ஜோதி என்ற பெயர் கொண்ட, அழகில் இணையில்லாத, ஒரு மங் கையை மணந்தான். ஷாஜியும், ஜோதியும் ஒருவர்க் கொருவர் கொண்டிருந்த மெய்யன்பு இத்தன்மைய தென்று சொல்வன்மையால் கூறத்தக்கதன்று; அக் காதல் இருவருள்ளத்திலும் ஒளிபோலத் திகழ்ந்தது. சில நாட்கள், சில மாதங்கள் கழிந்தன; மணம் முடிந்து ஒரு வருஷமும் ஒரு மாதமும் சென்றபின், ஒரு நாள் ஜோதி, கணவனுடன் நந்தவனத்தில் உலாவிக்கொண்டிருந்தபோது திடீரென்று பாம்பு தீண்டி இறந்தாள்.

ஷாஜியின் அளப்பரிய சோகத்தை எவரும் ஆற்றத் துணியவில்லை. அவளுடைய சவத்தைக் கிடத்தியிருந்த மஞ்சத்தின்மீது, அவன் இரண்டு நாள் முழுவதும் பசிதாக சாந்தியின்றி, அசைவின் றிக் கிடந்தான்; பிறகு தானாக எழுந்து உணவருந் தினான். அவன் கண்கள் நீர்வறண்டிருந்தன. பணி யாளரை யழைத்து அவன் சாதாரணக் குரலில் பேசினான். அரியதொரு பிரதிக்ஞையை மேற் கொண்டவன்போலத் தோன்றினான்; தன் மனைவி யின் உடலைத் தைலமாட்டிப் பட்டாற் போர்த்தி வெள்ளியும் ஈயமும் கலந்து வார்த்த ஒரு பெட்டியில் அடக்கம் செய்யும்படி உத்தரவிட்டான். அந்தப் பெட்டிக்கு மேலுறையாகத் தந்தமும் நவமணியு மிழைத்துச் சந்தன மரத்தாலாகிய வேறொரு பெட்டி

யும், அதற்கு மூடியாகப் பளிங்காலொரு கல்லறைப் பெட்டியும் சித்தம் செய்யும்படி கட்டளையிட்டான். முறைப்படி, காலையிலும் மாலையிலும் மார்பிலடித்துக் கொண்டும் புலம்பியும் அவன் துக்கப்படவில்லை. அரண்மனையில் இந்தக் கல்லறை வேலை நடைபெறும் நாளெல்லாம் அவன் தன் காதலியுடன் உலாவியிருந்த தோட்டங்களிலும், ஆற்றோரத்திலும் தன்னந் தனியே திரிந்தான்.

பிறகொருநாள் அவன் சபையோரைக் கூட்டித் தன் கருத்தை வெளியிட்டான். இனி ஒரு பெண்ணையும் தான் விரும்புவதில்லையென்றும், தன் தம்பிக்கு இளவரசுப் பட்டம் சூட்டி விடுவதென்றும், தன் மனைவியினழகும் தான் அவள் மேற்கொண்ட காதலும் இவ்வுலகில் இணையற்றன வென்பதை எல்லாருக்கும் எக்காலத்தும் நிரூபிக்கும்பொருட்டு அவள் கல்லறைக்கு உறைவிடமாக ஒப்புயர்வற்ற ஒரு மசூதி மண்டபம் கட்டவேண்டுமென்றும் தான் தீர்மானித்து விட்டதாகச் சொன்னான். சபையோர் அவன் கருத்துக்கிசைந்தனர்; குடிகள் அவனன்பை மெச்சினர்கள். தொழிலாளிகளும் சிற்ப நிபுணரும் பலர் கூடினர்; கட்டட வேலை அந்த வருஷமே தொடங்கியது. அந்த வேலை ஒருவாறு முடியமுப்பது வருஷங்களாயின. அதில் விரயமான பணத்தை எவரும் தொகுத்துக் கணக்குப் பார்க்கவில்லை. வருஷங்கள் செல்லச் செல்ல அரசன் அந்த மாளிகை வேலையிலேயே மனமுழுவதும் ஈடுபட்டு விட்டான்; சிற்ப நிபுணரைக் காட்டிலும் சிற்பத்தில் தேர்ந்தவனானான்.

அவனன்பையும், அவன் காதலியின் பெயரை யும் இணைத்து 'அன்பின் ஜோதி' என்று பெயரிடப்பட்ட அம்மகூதி காலப்போக்கில் ஆதியில் வகுத்தவாறின் றிப் பல மாறுதல்கள் அடைந்தது. ஆரம்பத்தில் சித்திரச் சிற்பக் கலைகளில் அரசனுக்குத் தேர்ச்சி யில்லை. அரசியின் கல்லறையை நடுவில் வைத்து அதற்கொரு மண்டபம் நாட்டி, அம்மண்டபச் சுவர் களில் விசித்திர வேலைகள் செய்து, அதைச் சூழ்ந்து ஒரு பெரிய மண்டபம் கட்டுவதையே சிற்பிகள் முதல் நோக்கமாகக் கொண்டிருந்தார்கள். நாளடை வில் அரசன், வயதும் அறிவும் முற்றி விரிந்த சிந் தனை கொண்டவனானன். அம்மாளிகை தன் மனங் கொண்ட அளவு மாட்சிமை பெற்றிலங்க வேண்டு மென்று நினைத்தான். விலை மதிப்புக்குட்படும் அலங் காரம் அம்மாளிகைக் கொவ்வாதென்றெண்ணி, நடு மண்டபத்திலிழைத்த நவமணிகள் பதித்த பொற் றகடுகளை யெல்லாம் எடுத்தெறியச் செய்தான். அம் மகூதியின் விரிவை முதலில் வகுத்ததைவிடப் பதின் மடங்காகப் பெருக்கி, அதன் வெளித்தோற்றமே கண்டவர் பிரமிக்கத் தக்கதா யிருக்கும்படி செய் தான்.

இருபது வருஷங்கள் சென்றபின் அந்நாட்டில் அரசனினும் தேர்ந்த சிற்பி எவனுமில்லை; சிற்ப நிபுணர்கள் அவனேவல்களின் கருத்தின்னதென் றறியாமலே, அவற்றைத் தலைமேற் கொண்டு நிறை வேற்றினர். கடைசிப் பத்து வருஷங்களாக அம் மகூதியை நிருமித்தவன் அரசனே யென்னலாம்.

அது முடிந்தபின் அவன் முதலெண்ணப்படி, இவ்வுலகில் ஒப்பற்றதாய் அது விளங்கிற்று. அந்தக் கட்டடத்தின் வெண்மையும் தூய்மையும் அழகும் பெருமையும் கண்டோர் கண்ணையும் உள்ளத்தையும் கவர்ந்தன. அம்மசூதியைச் சுற்றிலுமிருந்த சுனைகளும் நீர்க்கால்களும் பூப்பாத்திகளும் அமைந்த நந்தவனம், அதை அந்நாட்டின் இயற்கை வனப்புடன் பொருத்துவதுபோலிருந்தது.

மசூதிக்குக் கிழக்கே இருநூறு மைலுக்கப்பாலுள்ள குன்றில் கதிரவன் உதயமானவுடன், செங்கிரணங்கள் அம்மசூதியின் ஸ்தூபி மேற்பட்டு, அதை ஜோதி மயமாகப் பொலியச் செய்தன. மசூதியினுள் பல தோட்டங்களும் பிராகாரங்களு மிருந்தன. அவைகளில் ஒவ்வொன்றும் தனியழகு வாய்ந்தது; அது தெரியக்கூடாமல், அவை ஒன்றேடொன்றுஒத்திருந்த இசைவினழகு விரிந்து சோபித்தது. மசூதியின் நடுவில் அரசனமைத்த ஓர் ஆயிரக்கால் மண்டபம் இருந்தது. அதன் தளம் நீலமோடிய பளிங்காலமைந்து ஆகாய வர்ணத்தை யொத்திருந்தது. அதன் தூண்கள் திண்மையும் மென்மையும் சேர்ந்து அழகினுருக் கொண்டிருந்தன.

அம்மண்டபத்துள் நுழைந்து தூரத்தில் விளங்கும் குன்றின்மேல் கண்ணையச் சிந்தனையி லாழ்ந்திருப்பது அரசனுக்கு வழக்கமாய்விட்டது. அந்த ஆயிரக்கால் மண்டபத்திற்கு மத்தியிலிருந்த, அரசியின் கல்லறையைத் தன்னுட்கொண்ட, சிறு மண்டபம் இந்நாட்டத்தைத் தடுத்துக் கண் முட்டுவதா

யிருந்தது. அச் சிறு மண்டபம் ஆயிரக்கால் மண்டபத்தின் விரிவுக்கும் உயரத்துக்கும் தோற்றத்துக்கும் ஏற்ற நடுநாயகமாக விருக்கவில்லை. அதைக் கட்டியபோது அவ்வளவு பெருமிதத்தை யாரே கனவிலும் கண்டார்! வெகு நாளாகச் சிந்தனை செய்த பின் அரசன், பல விசித்திர வேலைப்பாடுகளமைந்த அச்சிறு மண்டபத்தை இடித்தெறிந்து தளத்தைச் சீர்படுத்தும்படி உத்தரவிட்டான். அப்படியே நடந்தது. அதன் பின்னரே அவ்வாயிரக்கால் மண்டபத்தின் விரிவும் மாண்பும் முற்றிலும் வெளிப்பட்டன. முதலில் அச்சிறு மண்டபத்திலடங்கிய சிற்ப வேலைகள் வீணாவதை யெண்ணி மனம் நொந்தவர் பலர். பின்னர்த் தோன்றிய அவ்வாயிரக்கால் மண்டபத்தின் பெருமையைக் கண்டு வியந்து அரசனாணையைச் சிரமேற்கொண்டு கொண்டாடினர். தினமும் அம் மண்டபத்தைக் காணப் பல்லாயிரம் ஜனங்கள் அவ்வூருக்கு வந்தார்கள். ஒரு பெண்ணால் இவ்வுலகில் இவ்வளவு அழகுண்டாயிற்றென்று பெருமையுற்றுப் பெண்பாலர் அனைவரும் அவ்வரசனை வாழ்த்தினார்கள்.

அழகு நிறைந்து விளங்கியது, அவ்வாயிரக்கால் மண்டபம். அவ்வழகு பரிபூரணமாயில்லாமல் ஒரு மறு இருந்தது. மண்டபத்தின் நடுவிலிருந்த பளிங்குக் கல்லறை அதன் மாண்போடொவ்வாமல் ஒரு மாசுபோலிருந்தது. மண்டபத்தினழகைக் கண்டு வியந்து செல்லும் பல ஜனங்களும் அக் கல்லறையைத் தாண்டி விரைந்து சென்றனர். இக்குறையை

உணர்ந்தும் அரசன் வெகு நாளாக ஒன்றும் செய்யவில்லே. பிறகு, ஒருநாள், கொத்து வேலேக்காரர் சிலரும் தன் பரிவாரமும் பின் தொடர அரசன் ஆயிரக்கால் மண்டபத்துக்கு வந்தான். குறைவேலே இனியேதென்றெண்ணிப் பல ஜனங்களும் அவனேச் சூழ்ந்து நின்ருர்கள். அரசன் அம்மண்டபத்தின் அழகை நாற்புறமும் சுற்றி நோக்கினன்; பின்பு அக் கல்லறையை உற்று நோக்கினன். நீல நிற ஆகாய வெளியில் ஒரு கைப்பெட்டி கிடந்தாற் போல அம்மண்டபத்தின் நடுவில் அக் கல்லறைப் பெட்டியிருந்தது. அதற்குள் சந்தன மரப்பெட்டி; அதற்குள் வெள்ளிப்பெட்டி; அதற்குள் இவ்வழகுக்கெல்லாம் காரணத்தாயான, அரசனின் இன்னுயிர்க் காதலியின் உடல் சேமித்து வைத்திருந்தது.

அரசன் பணியாளரை நோக்கினன்; தன் விரலால் அக் கல்லறைப் பெட்டியைச் சுட்டினன். "அதை யெடுத்து அப்புறப்படுத்துங்கள்" என்ருன்.

## 11. ஜப்பானும் ஜப்பானியரும்

நமது தேசத்திற்கு வடகிழக்கே, ஆசியாக் கண்டத்தின் கீழ்ப்பாகத்தில் பல தீவுகள் சேர்ந்து ஒரு சிறிய தேசமாக அமைந்திருக்கின்றன. இத்தேசத்திற்குச் 'சூரியோதய பூமி' யென்று பொருள் படும் **ஜப்பான்** என்ற பெயர் வழங்கி வருகிறது. இத்தேசம் 1,48,756 சதுரமைல் விஸ்தாரமுள்ளது; இதில் ஒரு வித மஞ்சள் நிற மக்கள் குடியேறியுள்ளார். நமது தேசத்தைப்போல அவ்வளவு புராதன சரித்திரம்

ஜப்பானுக்கில்லை; இதன் சரித்திரப் பெருமையெல்லாம் சமீப காலத்ததே. இதன் ஜனத்தொகையும் இந்தியாவின் ஜனத்தொகையில் ஏறக்குறை ஐந்திலொருபங்கேயாகும். இதன் வரலாற்றின் பெரும் பகுதி, பிற நாட்டாரோடு கலப்பின்றி ஜப்பானியர் வாழ்ந்ததையே குறிப்பிடுகிறது. சுமார்எழுபதாண்டுகளுக்கு முன்பாகப் **பெர்ரி** என்ற அமெரிக்க மாலுமி அதன் ஏகாந்தத்தைக் குலைத்து அயல் நாட்டு வியாபாரத்துக்கு அதன் கதவுகளைத்திறந்து வைக்கும் வரையில், ஆசியாக்கண்டத்திலே பெரும்பாலும் —உலகத்திலே சிறிதும்—அதன் பெயரே கேள்விப் படாமலிருந்தது.

ஜப்பான் தன் சமயத்தை இந்தியாவிலும் கலைகளைப் பெரும்பாலும் சீனத்திலும் இரவலாகப் பெற்றுக்கொண்டது. கி. பி. ஆருவது நூற்ருண்டில் புத்த சமயம் ஜப்பானில் பரவலாயிற்று. ஜப்பானுக்குச் சென்ற இந்திய பௌத்தர்கள் ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் இந்திய ஞானவொளியை அந்நாட்டில் பரப்பினர்கள். **தர்மபோதி** என்றும் பெரியாரது உபதேசமே ஜப்பானில் புத்த சமயம் பரவியதற்கு முதற் காரணமாக விருந்தது. **போதிசேனன்** என்னும் தென்னுட்டுப் பிராமணனெருவன் **மஞ்சுஸ்ரீ** என்னும் பெரியாரைச் சந்திப்பதற்குச் சீனதேசம் சென்று, அப்பால் ஜப்பானுக்குப்போய் அந்நாட்டிலுள்ள குருமார்களுக்கு வடமொழி கற்பித்ததோடு சில கோவில்களையும் அங்கே நிர்மாணஞ் செய்வதற்குக் காரணமாக விருந்தானென்று அறிகிரும்.

பண்டை நாளில் ஜப்பான் தொழிற்சாலைகளும் அயல்நாட்டு வியாபாரமுமின்றி, பெரும்பாலும் விவசாய பூமியாகவே யிருந்தது; இரும்பும் மற்ற உலோகங்களுமில்லாமல் சிறிதளவே நிலக்கரிக் கனிகளைப் பெற்றிருந்தது. எனவே அது பொருட் செல்வத்திலும் புராதன இந்தியாவுக்கு மிகவும் குறைந்தேயிருந்ததென்னலாம். இத்தகைய தேசம் தற்கால உலகத்தின் செல்வாக்குள்ள தேசங்களில் ஒன்ருகத் திகழ்கின்றது. ஐரோப்பாவிலுள்ள பிரிட்டிஷ் தீவுகளைப்போல் ஜப்பான் தீவுகளும் அமைப்பிடத்திலும், நாகரிகத்திலும், வியாபாரப் பெருக்கிலும், கைத்தொழிற் சிறப்பிலும், குடிகளின் ஊக்கத்திலும், அரசியல் முறையிலும், ஆசியாக் கண்டத்தில் முதன்மை பெற்றிருக்கின்றன. ஜப்பானியர் தங்கள் தேசத்தை உலக வல்லரசுகளில் ஒன்ருக்கியதோடு அமையாது ஒரு பலமான ஏகாதிபத்தியத்தை நிலையிட முயல்வதிலும் ஆங்கிலேயரை ஒத்திருக்கிருர்கள். இவர்கள் ஆங்கிலேயரைப்போலவே தங்களுடைய தாய் நாட்டின்மீதும் சக்கரவர்த்தியின்மீதும் அளவு கடந்த அன்புள்ளவர்களாகவு மிருக்கின்றனர்.

ஜப்பான் இன்னும் பலவேறு துறைகளிலும் முற்போக்கடைந்திருக்கிறது. இராணுவபலத்திலும் இது ஐரோப்பிய வல்லரசுகளுக்கு ஒரு சிறிதும் இளைத்ததாக இல்லை. பொது ஜனங்களுக்குக் கல்வி புகட்டும் பொருட்டு ஜப்பானில் பல பல்கலைக்கழகங்களும் கல்லூரிகளும் நிறுவப்பெற்றிருக்கின்றன. மேலும் ஜப்பானியர்கள் தங்களுடைய இளைஞர்கள்

விசேஷப் பயிற்சி பெறும்பொருட்டு அவர்களை அயல்நாடுகளுக்கு அனுப்புவதுண்டு. பல பாஷைகளில் தேர்ச்சி பெற்ற நிபுணர்களும் இரசாயனம், வைத்தியம், விஞ்ஞானம், சிற்பம் முதலிய கலைகளில் விசேஷ ஆராய்ச்சி யறிவு வாய்ந்த நிபுணர்களும் இன்று ஜப்பானில் காணப்படுகின்றனர். சென்ற சில வாண்டுகளாகப் பெண் கல்வியும் அபிவிருத்தி யடைந்து வருகிறது. பெண்கள் கல்விப் பயிற்சி பெற்ருலொழிய, ஜப்பானின் எதிர்காலப் பிரஜைகள் அறிவாளிகளாக விளங்க முடியாதென்பதை இப்பொழுது சில மேதாவிகள் நன்குணர்ந்து கொண்டு தங்கள் கொள்கையைத் தீவிரமாக நாடெங்கும் பிரசாரம் செய்து வருகின்றனர். பெண்களுக்கு அறிவுப்பயிற்சி யளிக்கும் விஷயமாகவும் அவர்களுடைய நியாயம் உரிமைகளைப் பாதுகாக்கும் விஷயமாகவும் தக்க நடவடிக்கைகளைக் கையாளும்பொருட்டுப் பல சங்கங்கள் காணப்பெற்றிருக்கின்றன.

இவ்விதமாக ஜப்பான் ஆசியாக் கண்டத்தில் முதன்மையும் உலகத்தில் முன்னணியும் பெற்று விளங்குவதற்குக் காரணமென்ன? ஜப்பானியர்கள் மேல் நாடுகளில் தழைத்தோங்கி வரும் புதுமைக் கலைகளான விஞ்ஞான சாஸ்திரங்களைக் கற்று அவற்றைத் தங்கள் வாழ்க்கைக்குப் பயன்படுத்திக்கொள்ளும் ஆவலும் ஆற்றலு முள்ளவர்களாக விருப்பதே அவர்களது முன்னேற்றத்திற்கு முக்கியமான காரணமாகுமென்று திண்ணமாகக் கூறலாம். ஜப்பானியரது கல்வி விஞ்ஞான சாஸ்திரப் பயிற்சியை

முக்கிய அம்சமாகக் கொண்டிருக்கிறது. ஜப்பான் தனது 'கோஷா'வினின்று வெளியேறி அயல் நாடுகளோடு அளவளாவத் தொடங்கியதும், அரசாங்கத்தார் தங்கள் ஜனங்களுக்குத் தற்கால முறையில் கல்விப் பயிற்சியளிக்க விரும்பினர். கி. பி. 1869லேயே "எல்லா வகுப்பாருக்கும் கல்வி அவசியம்; ஒரு கிராமத்திலாவது ஒரு வீட்டிலாவது படியாத ஒருவரு மிருக்கக்கூடாது" என்று விதி செய்தனர். இவ்விதியை யனுசரித்து ஆரம்ப-நடுத்தர-உயர்தரக் கலாசாலைகளும், பல்கலைக் கழகங்களும், விவசாயம் கைத்தொழில் சிற்பவேலைகள் சம்பந்தமான கல்விச் சாலைகளும் ஏற்பட்டன. தொழிற் கல்விக்காக அமெரிக்க ஐரோப்பியத் தலைநகரங்களின் கலாசாலைகளுக்கும் பல்கலைக் கழகங்களுக்கும் தொழிற் பயிற்சிச் சாலைகளுக்கும் சிறுவர்கள் ஏராளமாக அனுப்பப்பட்டனர். அங்ஙனம் கற்றுத் தேர்ந்த சிறுவர்கள் தம் கல்வி யொழுக்கங்களைத் தம் நாட்டிற் போதித்துத் தலைவர்களாகவும் ஆசிரியர்களாகவும் அமர்ந்தனர்.

இத்தகைய கல்வி முயற்சிகளால் சுமார் 70 வருஷங்களுக்கு முன் வியாபாரத்தில் வெறுப்புக் கொண்டு கேவலம் விவசாய பூமியாகவே யிருந்த ஜப்பான் இந்நாளில் தொழிற் கல்வியும் வியாபார அபிவிருத்தியும் தனது பொருளாதார வளர்ச்சிக்கு இன்றியமையாதவை யென்பதை நன்குணர்ந்து முன்னேற்றமடைந்து வருகிறது. இப்பொழுதை இந்தியாவைப்போலப் பல ஜாதியாகவும் பற்பல

உட்பிரிவுகளாகளாகவும் பிரிந்து போர்வீரராகிய 'சாமுராய்' என்னும் சாதியார் ஆதிக்கத்துக் குட்பட்டிருந்த இத்தேசம் இன்று கீழ்நாடுகளில் நவீனக் கைத்தொழில் முயற்சிகளிலே தலை சிறந்து விளங்குகிறது. ஐரோப்பிய அறிவாலும் கலைகளாலும் ஆசியாக் கண்டத்தில் தோன்றிய புது வாழ்வியக்கம் முதன் முதல் இந்தியாவிலேதான் தொடங்கியது; இவ்வியக்கம் ராஜ ராம மோகனர், ஈசுவர சந்திர வித்தியாசாகரர் ஆகிய அறிஞர்கள் மூலமாக வங்காளத்தில் தோன்றியது. ஜப்பானில் வெளிநாட்டார் கூட்டுறவு ஏற்படுவதற்கு அரைநூற்றாண்டுக்கு முன்னமே, இந்தியாவில் அவர்களது கூட்டுறவின் பயனாகப் புத்துணர்ச்சி ஏற்பட்டிருந்தும், ஜப்பானே புது வாழ்வியக்கத்தின் பயனைப் பரிபூர்ணமாக அனுபவித்ததென்னலாம்.

ஜப்பானில் ஆலைத் தொழில்கள் வளர்பிறை போலப் பெருகிக் கொண்டிருக்கின்றன. அதன் வியாபாரம் நடவாத நாடும் அதன் கப்பல்கள் செல்லாத தேசமும் இல்லையென்றே கூறலாம். தற்கால நாகரிக வாழ்க்கையில் ஜப்பான் மேல்நாடுகளுக்கு ஒருசிறிதும் இளைத்துக் காணப்படாமல், அவற்றோடு சரிசமமான கௌரவம் பெற்று நிற்கிறது. எனினும் ஜப்பானியர் ஆடம்பர வாழ்க்கையை விரும்புவதில்லை; பெரும் பணம் செலவிட்டு வீடுகள் மாளிகைகள் முதலியன அமைக்கவும் ஆடம்பரமான சாமான்களை வாங்கவும் அவர்கள் எக்காரணங்கொண்டும் முன் வரமாட்டார்கள். அவர்கள் சிக்கனமாக

வாழ்ந்து நாட்டின் பொருளாதார நிலைமையை அபி விருத்தி செய்து வருவதை உலகத்தினர் பெரிதும் பாராட்டுகின்றனர்.

ஜப்பானியர்கள் விசேஷ இராணுவப் பயிற்சியும் பெற்றிருக்கின்றனர். அவர்கள் தங்கள் ஏகாதிபத்தியத்தைப் பலப்படுத்திக்கொள்வதற்கு இராணுவம் இன்றியமையாத தென்பதை நன்குணர்ந்து




நூற்றுக்கணக்கான போர்க் கப்பல்களையும், அமெரிக்க ஜெர்மன் நிபுணர்களின் உதவியால் ஏராளமான யுத்த விமானங்களையும் யந்திரத் துப்பாக்கிகள், பீரங்கிகள், வெடிகுண்டுகள், விஷப்புகை முதலியவற்றை உற்பத்தி செய்யும் பல தொழிற்சாலைகளையும் அமைத்துக்கொண்டனர்.

சமீபத்தில் சீனவுக்கும் ஜப்பானுக்கும் கடுமையானதோர் போர் நிகழ்ந்தது. அப்போரில் ஜப்பா

னைப் பார்க்கிலும் பன்மடங்கு பெரியதாகவிருக்கும் சீனு தோல்வியுற்றது. சீனுவில் சரித்திரப் பெருமை வாய்ந்த மூன்று பெருமதில்களுண்டு. பழைய சக்கர வர்த்திகள், எதிரிகள் தங்கள் இராஜ்யத்தில் நுழை வதைத் தடுப்பதற்காக இம்மதில்களைக் கட்டினார்கள். சீனுவின் மையத்திலுள்ள பெருமதில் சுமார் 2500 மைல் நீளமுள்ளது. இப்பெருமதிலுக்குச் சமீபத்திலே ஜப்பானியர்கள் யந்திரத் துப்பாக்கிகளோடும் வெடி குண்டுகளோடும், ஆகாய விமானங்களோடும் சீனர் களை எதிர்த்துப் போராடி அருகேயுள்ள முக்கிய மான நாடுகளைக் கைப்பற்றிக்கொண்டனர்.

இவ்விதமாக ஜப்பான் வரவர மிக்க உன்னத நிலையையடைந்து வருவதற்கு முக்கியமான காரணம், ஜப்பானியர்கள் தற்கால அறிவுப் பயிற்சியை வாழ்க்கையின் பல துறைகளிலும் பயன்படுத்திக் கொண்டு விடாமுயற்சியுடனும் ஒப்பற்ற தன்னம் பிக்கையுடனும் முன்னேறிச் சென்று கொண்டிருப் பதேயாகும்.

---

## 12. குறத்தி மலைவளங் கூறுதல்

வானரங்கள் கனிகொடுத்து மந்தியொடு கொஞ்சும்
மந்திசிந்து கனிகளுக்கு வான்கவிகள் கெஞ்சும்
கானவர்கள் விழியெறிந்து வானவரை யழைப்பார்
கவனசித்தர் வந்துவந்து காயசித்தி விளைப்பார்
தேனருவித் திரையெழும்பி வானின்வழி யொழுகும்
செங்கதிரோன் பரிக்காலுந் தேர்க்காலும் வழுகும்
கூனலிளம் பிறைமுடித்த வேணியலங் காரர்
குற்றாலத் திரிகூட மலையெங்கள் மலையே. 1.

முழங்குதிரைப் புனலருவி கழங்கெனமுத் தாடும்
முற்றமெங்கும் பரந்துபெண்கள் சிற்றிலைக்கொண் டோ[டும்
கிழங்குகிள்ளித் தேனெடுத்து வளம்பாடி நடிப்போம்
கிம்புரியின் கொம்பொடித்து வெம்புதினை யிடிப்போம்
செழுங்குரங்கு தேமாவின் பழங்களைப்பந் தடிக்கும்
தேனலர்சண் பகவாசம் வானுலகில் வெடிக்கும்
வழங்குகொடை மகராசர் குறும்பலவி லீசர்
வளம்பெருகுந் திரிகூட மலையெங்கள் மலையே. 2.

ஆடுமர வீனுமணி கோடிவெயி லெறிக்கும்
அம்புலியைக் கவளமென்று தும்பிவழி மறிக்கும்
வேடுவர்கள் தினைவிரைக்கச் சாடுபுனந் தோறும்
விந்தையகில் குங்குமமுஞ் சந்தனமும் நாறும்
காடுதொறு மோடிவரை யாடுகுதி பாயும்
காகமணு காமலையில் மேகநிரை சாயும்
நீடுபல வீசர்கயி லாசகிரி வாசர்
நிலைதங்குந் திரிகூட மலையெங்கள் மலையே. 3.

கொல்லிமலை யெனக்கிளைய செல்லிமலை யம்மே
கொழுநனுக்குக் காணிமலை பழநிமலை யம்மே
எல்லுலவும் விந்தைமலை யெந்தைமலை யம்மே
இமயமலை யென்னுடைய தமயன்மலை யம்மே
சொல்லரிய சாமிமலை மாமிமலை யம்மே
தோழிமலை நாஞ்சிநாட்டு வேள்விமலை யம்மே
செல்லினங்கள் முழவுகொட்ட மயிலினங்க ளாடுந்
திரிகூட மலையெங்கள் செல்வமலை யம்மே. 4.

---

## 13. ஸர் சி. வி. ராமன்

மேல் நாடுகளைப்போல் நமது நாட்டில் விஞ் ஞானசாஸ்திர ஆராய்ச்சிகளுக்கு வேண்டிய சோத னைச் சாலைகளும் பிறவசதிகளும் இல்லாததால், அத் தகைய ஆராய்ச்சிகளில் பெருவிருப்பம் கொண்ட வர்களும் அவற்றைத் திறமையாகச் செய்யும் தகுதி வாய்ந்தவர்களுங்கூட ஆராய்ச்சித் துறையில் இறங் கத் துணிவதில்லை. இந்நிலையில் மேலைத் தேசப் புலவர்களும் பிரமிக்கும்படி ஒலியைப் பற்றியும் ஒளி யைப் பற்றியும் புதிய சோதனைகள் செய்து பௌதிக சாஸ்திரச் சார்பாக அளிக்கப்பட்ட நோபல் பரிசை யும் தமிழர் ஒருவர் பெற்றனர் என்றால், அது நமது பெருவியப்பிற்கும் பெருமகிழ்ச்சிக்கும் ஒருங்கே உரியதாகுமன்றோ? இத்தமிழர் **சந்திரசேகர வேங்கட ராமன்** என்பவரே.

இவர் கி. பி. 1883-ம் ஆண்டு நவம்பர் மாதம் ஏழாம் தேதி பிறந்தார். இவரது தந்தையாகிய சந் திரசேகர ஐயர் தஞ்சை ஜில்லாவைச் சேர்ந்தவர்; இவர் பிறக்கும்போது அவர் திருச்சியிலுள்ள எஸ். பி. ஜி. கல்லூரியில் ஆசிரியராக விருந்தார். ராம னுக்கு நான்கு வயதானபோது சந்திரசேகர ஐயர் விசாகப்பட்டினத்திலுள்ள கல்லூரியொன்றில் இர சாயன சாஸ்திர போதகராக நியமிக்கப்பட்டார். இந் நியமனத்தினால், ராமன் விசாகப்பட்டினத்தி லேயே பதினன்கு வயதுவரையில் கல்வி பயிலநேர்ந் தது. இவர் இளமையிலேயே சிறந்த அறிவும் விடா

முயற்சியும் பௌதிகரசாயன சாஸ்திரங்களில் பேரார்வமுமுடையவராகக் காணப்பட்டார். இவர் தமது பி. ஏ. படிப்பிற்காகச் சென்னையிலுள்ள துரைத்தனக் கல்லூரியில் (Presidency College) சேர்ந்தபோது, இவரது ஆராய்ச்சித் திறனும் அறிவுக் கூர்மையும் அங்குள்ள ஆசிரியர் பலரது உள்ளத்தையும் ஒருங்கே கவர்ந்து வசீகரித்தன. அவர்களிலொருவரான திரு. எச். ஆர். ஜோன்ஸ் என்பவர் ராமன் உலகப் பிரசித்தி பெற்று விளங்கக் கூடுமென்று முன் கூட்டியே அறிந்து, அவரது அறிவுப் பயிற்சிக்கு இன்றியமையாத பல உதவிகளையுஞ் செய்தார். ஸி. வி. ராமன் 1904-ம் ஆண்டில் பி. ஏ. பரீட்சையிலும், 1907-ம் ஆண்டில் எம். ஏ. பரீட்சையிலும், முதல்தரமாகத் தேர்ந்தார்.

தாம் மாணவராக விருந்த காலங்களில், அவர் பௌதிக சாஸ்திரத்தின் ஒரு பகுதியான ஒலியைப் பற்றிய விஷயத்தை ஆராய்ந்து கொண்டிருக்கும்போது, அந்நாள் வரையில் எவரும் அறிந்திராத சில புதிய நிகழ்ச்சிகளை அவரும் வேறொரு நண்பரும் கவனித்தறிந்து, நேச்சர் (Nature) என்ற ஆங்கிலப் பத்திரிகையில் தாங்கள் புதிதாக அறிந்தவற்றைப் பிரசுரஞ் செய்தனர். அக்காலத்தில் விஞ்ஞானக் கலையில் நம்மக்கள் விசேஷ ஊக்கம் கொண்டிராததாலும், அக்கலைஞர்களுக்குத் தக்க ஆதரவு நமது நாட்டில் அளிக்கப்படாததாலும், ராமன் அரசாங்க உத்தியோகத்தில் அமர்ந்து கொள்ளலாமென்று கருதினர். இக்கருத்தோடு அவர் இந்தியப் பொக்



ஸர். சி. வி. ராமன்

கிஷ இலாகாவில் உத்தியோகஸ்தர்களின் நியமனத்திற்காக நடைபெற்ற ஒரு போட்டிப் பரீட்சையில் கலந்துகொண்டு அதில் முதன்மையாகத் தேர்ந்தார். இதன் பயனாக இருபது ஆண்டு நிரம்புவதற்குள் மாதம் 500 ரூபாய் சம்பளமுள்ள உதவி அக்கவுண்டெண்டு ஜெனரலின் பதவி இவருக்குக் கிடைத்தது.

அரசாங்க உத்தியோகம் வகித்துவந்த காலத்திலும், இவர் ஒழிவு நேரங்களை யெல்லாம் விஞ்ஞான சாஸ்திர ஆராய்ச்சிக்கே பயன் படுத்தி வந்தார். கல்கத்தாவில் விஞ்ஞான சாஸ்திர அபிவிருத்திக்காக டாக்டர் மஹேந்திரலால் சர்க்கார் என்பவரால் ஏற்படுத்தப்பட்ட இந்திய சாஸ்திர ஆராய்ச்சிச் சங்கத்தில் சேர்ந்து தாம் ஆராய்ந்து வந்த விஷயங்களைப் பல விஞ்ஞான சாஸ்திரப் பத்திரிகைகளின் வாயிலாக வெளியிட்டு வந்தார். இவரது ஆராய்ச்சித் திறமை அந்நாளில் கல்கத்தாப் பல்கலைக் கழகத்தில் வைஸ் சான்ஸலராக விருந்த ஸர். அஷுடோஷ் முகர்ஜியின் கவனத்தை ஈர்த்தது. 1917-ம் ஆண்டில் பாலித் என்பவர் பெயரால், குறித்த பல்கலைக் கழகத்தில் விஞ்ஞான சாஸ்திரப் புலவரொருவரை நியமிக்க ஒரு நிதி யேற்படுத்தப்பட்டது. அப்பதவியை யேற்கும்படி ஸர் அஷுடோஷ் ராமனை வேண்டிக்கொண்டார். ராமன் உடனே மாதம் மூவாயிரம் ரூபாய் வரையில் சம்பளம் உயரக் கூடிய தமது அரசாங்க உத்தியோகத்தை ராஜிநாமாச் செய்துவிட்டு, குறைந்த சம்பளத்தில் பௌதிக ஆசிரியர் பதவியை வகிக்கத் துணிந்தார்.

அதுமுதல் ராமனுடைய ஆராய்ச்சிகள் உலக மெங்கும் பிரசித்திபெற்றன. 1924-ல் இங்கிலாந்தி லுள்ள **ராயல் சொஸைடியார்** ராமனைத் தங்கள் சங்கத் தின் உறுப்பினராகச் சேர்த்துக்கொண்டு, அதன் அறிகுறியாக **எப். ஆர். எஸ்.** என்ற பட்டத்தையும் அளித்தார்கள். ராமனுடைய பேராற்றலை இந்திய அரசாங்கமும் பாராட்டி அவருக்கு '**ஸர்**' பட்டத் தைச் சூட்டியது. 1930-ம் ஆண்டில் பௌதிக சாஸ் திர நோபல் பரிசும் இவருக்கு அளிக்கப்பட்டது. இவர் இப்பரிசை நேரில் பெற்றுக்கொண்டு மேல் நாடுகளிலுள்ள பல்கலைக் கழகங்களில் தம் ஆராய்ச்சி களைக் குறித்துச் சொற்பொழிவுகள் செய்துவிட்டுத் தாய் நாட்டுக்கு மீண்டார்.

அரிய விஷயங்களை அனைவரும் எளிதிலறியும் படி உபந்யசிப்பதிலும், தமது ஆதரவில் ஆராய்ச்சி நடத்தும் மாணவர்களை உற்சாகப்படுத்தித் தூண்டுவ திலும் ராமன் நிகரற்று விளங்குகிறார். ஆசியாக் கண்டத்தில் முதன் முதல் பௌதிக சாஸ்திரத் துறை யில் நோபல் பரிசு பெற்றவர் இவரே. இவருக்குத் தமது தாய்நாட்டின்மேல் பேரபிமான முண்டு. இந் நாடு விஞ்ஞான சாஸ்திரத் துறையிலும் பிற நாடு களுக்கு இளைத்ததன்று என்பதை இவருக்குக் கிடைத்த நோபல் பரிசு உலகறியச் செய்துவிட்டது.

ஸர் சி. வி. ராமன் கண்டுபிடித்த பௌதிக சாஸ்திரப் பேருண்மை இன்னதென்று அறிந்து கொள்ளுவது சாமானிய ஜனங்களுக்குக் கஷ்டமே யாகும். இது '**ராமன் விளைவு**' (Raman Effect) என்ற

பொருத்தமான பெயரால் அழைக்கப் படுகிறது; இது பல்லாண்டுகளாக அவர் தொடர்ந்து செய்து வந்த ஆராய்ச்சியின் பயனுக 1928-ம் ஆண்டில் கண்டு பிடிக்கப்பட்டது. வானத்தின் நீல நிறத்தை யும் கடலின் நீல நிறத்தையும் கவிகள் வருணிக் கிருர்களல்லவா? விஞ்ஞான அறிஞர்களோ இந்நீல நிறத்தின் காரணத்தை யறிய விரும்பினர். அதற் குச் சாஸ்திரரீதியான காரணத்தை முதலில் விளக் கியவர் **ராலே பிரபு** வென்பவர். இத்தகைய சோதனை யில் ராமனுடைய உள்ளமும் ஈடுபட்டது; இவர் மிக வும் நுட்பமான ஒரு கருவியைச் செய்து முடித்து நூற்றுக்கணக்கான பரீட்சைகளைச் செய்து பார்த் தார். இப் பரீட்சைகளின் பயனுகக் கண்டுபிடிக்க பட்டதே **'ராமன் விளைவு'** என்பது. இது சாஸ்திர உல கில் ஒரு புதிய உண்மையா யிருப்பதோடு, பதார்த்த அணுக்களின் குணுதிசயங்களை உள்ளவாறு அறிந்து கொள்ளுவதற்கும் ஒரு புதிய வழிகாட்டியாகப் பெரி தும் உபயோகப்படுமென்று மேல்நாட்டு மேதாவிய ரான விஞ்ஞான சாஸ்திர நிபுணர்கள் அபிப்பிரா யப் படுகின்றனர். பௌதிக சாஸ்திரம், இரசாயன சாஸ்திரம் ஆகியவை சம்பந்தமான சாஸ்திரச் சஞ்சி கைகளில் 'ராமன் விளைவு' பற்றிய ஆராய்ச்சிகள் சாதாரண அம்சங்களாகி விட்டன.

விஞ்ஞான சாஸ்திரத்தை எல்லாரும் படிக்க வேண்டுமென்றும், இந்தியாவுக்கு இன்றியமையாத விஷயங்களில் இதுவும் ஒன்ருகக் கருதப்படவேண்டு மென்றும், அப்பொழுதுதான் நமது தாய் நாடு

பொருளாதார நிலைமையிலும் வேறு துறைகளிலும் முன்னேற்றமடையக் கூடுமென்றும் ஸர். சி. வி. ராமன் சொல்லுகிறார். 'விஞ்ஞானக் கலையும் கைத் தொழில்களும்' என்ற விஷயத்தைப் பற்றி, பங்களூர் விஞ்ஞானக் கலைச்சங்கத்தின் ஆதரவில் அவர் பேசிய போது, விஞ்ஞானக்கலையறிவை வளர்க்கும் ஆராய்ச் சிக்காரர்களோடு அவ்வறிவை உபயோகித்து இலட் சக்கணக்கான ஏழை இந்தியர்களிடையே பொருள் நிலையை அபிவிருத்தி செய்யும் பெரியோர்களும் நமது நாட்டிற்கு மிகவும் அவசியமானவர்களென்று குறிப்பிட்டுள்ளார்.

மேலுமவர் இப்பிரசங்கத்தினுடையே கூறியது வருமாறு:—"இந்திய சமூகம் பெரும்பாலும் விவசா யத்தையே நம்பியுள்ளது. உணவுப் பொருள் ஒன்று தவிர மற்ற எல்லாப் பொருள்களுக்கும் இந்தியா பிறநாடுகளையே நோக்குகிறது. இது தேசீயப்பொ ருள் நிலையைப் பெரிதும் பாதித்து எல்லோருக்கும் கவலையை யுண்டாக்குகிறது. இதை மாற்றி இந்தி யாவிலேயே பல பொருள்களையும் செய்ய வசதி அமைப்பது அவசியமாகும். வீட்டுக்கு வேண்டிய சாமான்களெல்லாம் இங்கேயே செய்யப்படவேண் டும். இக்காரியத்திற் கலந்துழைக்க அரசியல் வாதி கள் மட்டுமேயன்றி விஞ்ஞானக் கலைஞரும் தம் தேசத் திற்குக் கடமைப் பட்டவரென்பதைத் தெரிவிப்பது என் நோக்கமாகும். விஞ்ஞானக் கலையை எவ்வாறு தேச நலத்திற்குப் பயன்படுத்திக்கொள்ளலாமென்ற விஷயத்தில் இக்கலைஞர் வழிகாட்டவேண்டும்."

இப்பொன்னுரைகளை நாம் நன்ருகச் சிந்தை செய்து ஸர் சி. வி. ராமனைப் போன்ற பேரறிஞர் களின் அடிச் சுவடுகளைப் பின் பற்றுவோமாயின், நமது நாடு பொருள் நிலையில் உயர்வு பெறுதல் கூடும்.

---

## 14. மலையும் அணிலும்.

'அற்பத் திருடா' வென்றெனை அழைத்த
வெற்பே! யானும் விளம்பக் கேளாய்.
'அளக்க லாகா அளவும் பொருளும்
துளக்க லாகா நிலையும் தோற்றமும்
வறப்பினும் வளந்தரு வண்மையு முனக்'கென்
றுரைமொழி முற்று முண்மையே ஆயின்
ஒருவகைப் பொருளி னேருல காமோ?
ஒருவெயில் மழையினுண் டொன்று தேறுமோ?
பற்பல பொருளும் பற்பல பருவமும்
ஒன்ருய்க் கூடினே உலகாம், ஆண்டாம்.
ஆதலின் யானிவ் வகிலமீ துதித்தே
இருப்பதை யிழுக்கா யெண்ணவு மாட்டேன்
என்தொழி லியற்றவும் யாவர் வேறுளார்?
உன்பெரு வடிவெனக் கில்லை. உனக்கும்
என்சிறு வடிவிலை; மேலும் என்றன்
உள்ளக் களிப்பில், உற்று நோக்கில்
எள்ளத் தனையு முனக்கிலை யிலையே.
அணிற்பிளை சாடி ஓடி அலைந்து
விளையா டற்கு விரிவிடம் பெறுவாய்,
ஐய மிதற்கிலை. அடலும், ஆற்றலும்

ஒவ்வொரு வர்க்கு மொவ்வொரு விதமாம்.
அறத்தொடு முறையொடு மாழ்ந்த அறிவொடும்
அனைத்துமிவ் வுலகில் அமைக்க லாயின.
வனங்களை முதுகில் வகித்து நின்றிட
வல்லைநீ யாயின், மற்றிங் கெனைப்போல்
நெல்லைக் கொறிக்க நின்னு லாகுமோ?
யாவரே பெரியர்? யாவரே சிறியர்?
ஒன்றிற் பெரியவர் ஒன்றிற் சிறியராம்,
ஒன்றிற் சிறியர் ஒன்றிற் பெரியராம்,
ஆதலின் அற்பர் ஆகா தவரென
ஓதுதல் மடமையின் சாதனை அறிவாய்.

—தேசிக விநாயகன்

---

## 15. மகா கவி ரவீந்திர நாதர்.

நவீன இந்தியாவின் கவியரசென்று புகழப் பெறும் ரவீந்திரநாத தாகூரின் பெயர் நமது தாய் நாடெங்கும் பிரசித்தமாக விருப்பதோடு, பிற நாடுகளிலும் பிரசித்தி பெற்று விளங்குகிறது. இப்பெரியார் வங்காள நாட்டிலே இப்பொழுது சாதாரணமாகக் **கல்கத்தா**வென்று அழைக்கப்படும் **காளி கட்டத்**தில் கி. பி 1861-ம் வருஷம் பிறந்தார். தாகூர் - குடும்பம் வங்காளத்திலே செல்வச் சிறப்பு வாய்ந்திருந்ததோடு தொன்மை மாட்சியும் இடையறாத நல்லொழுக்கமும் பொருந்திய பரம்பரை வாய்ந்ததாகவுமிருந்தது. ரவீந்திர நாதரின் தந்தையாரான மகரிஷி தேவேந்திர நாத தாகூர் குணமென்னும் குன்

றேறி நின்ற ஓர் பெரியவர். அவருக்குப் பெற்றோ ரால் இடப்பட்ட குறியாக அமைந்த பெயர் தேவேந் திர நாதராயினும், அவரது குண விசேஷத்தினாலும் தூய வாழ்க்கையினாலும் 'மகரிஷி' என்ற காரணப் பெயரும் அவருக்குக் கிடைத்தது.

பரம்பரை ஜமீன்தாரர்களான தாகூர் குடும் பத்தார் தமது குடும்ப பரிபாலனத்தின் பொருட்டும் தம்மைச் சார்ந்திருக்கும் குடியானவர் பாதுகாப்பின் பொருட்டும் தமக்குக் கிடைத்துள்ள பெருஞ் செல் வத்தின் 'தர்ம கர்த்தர்'களாகவே தம்மை மதித்துச் சென்ற இருநூறு வருஷங்களாக மாறாத பெருவாழ்வு வாழ்ந்து வருகின்றார். ஓவியம் சங்கீதம் காவியம் ஆகிய அருங்கலைகளிலும் உபநிடதம் முதலிய ஞான நூல்களிலும் தேர்ச்சிபெற்ற பலர் அவ்வம்சத்தில் தோன்றி யிருக்கின்றனர். இத்தகைய மகா வம்சத் திலுதித்து அதனை முன்னிலும் அதிகமாக ஒளிபெ றச் செய்தவர் மகாகவி ரவீந்திர நாதர்.

மகரிஷி தேவேந்திர நாதர் ஓர் உள்ளத் துறவி; ராஜா ராம் மோகனர் ஏற்படுத்திய பிரமசமாஜத்தை விசேஷ பக்திக் காதலை வளர்க்கும் ஒரு பாகவத சமாஜமாக்க முயன்றார். சிறந்தநற்குண நற்செய்கை யுடையராய் மனமெய் மொழிகளில் அன்பும் அருளு முடையவராக வாழ்க்கை நடத்திய அப்பெரியாரது கைகளில் பறவைகள் அச்சமின்றி வந்து தங்குமென் றும், அவரது முழந்தாள்களில் அணிற் பிள்ளைகள் நிர்ப்பயமாக வந்து விளையாடுமென்றும் கூறுவ துண்டு. இத்தகைய தந்தையினும் பன்மடங்கு குண

நலத்தோடும் மதி நலத்தோடும் கருவிலே திருவு டையராகத் தோன்றியவர் ரவீந்திர நாதர். இவர் தமது தந்தையாரோடு பல இடங்களுக்கும் சென்று இளமையிலே அழகு வாய்ந்த இயற்கைப் பொருள் களையும் இயற்கைத் தோற்றங்களையும் கண்டு பேரா னந்த மடைவார். தந்தையார் சிற்சில சமயங்களில் பனி மலையாகிய இமயமலைப் பக்கம் செல்லுவ துண்டு; அச்சமயங்களிலும் ரவீந்திர நாதர் அவரு டன் சென்று விண்முட்ட நிமிரும் மலைச் சிகரங்களை யும் கண்முட்ட வளம்படைத்த காடுகளையும் சோலை களையும் கண்டு அக்காட்சி யின்பங்களில் தம்மை முற்றும் இழந்து விடுவார். இவ்வியற்கைக் காட்சி கள் இவர் உள்ளத்தையும் உணர்வையும் ஒருங்கே வசமாக்கி மலரச்செய்து இவரது கவித்துவ சக்தி யைத் தூண்டி வளர்த்தன.

ரவீந்திரநாதர் இளமையில் பள்ளிக்கூடக் கல் வியை விசேஷமாக விரும்பவில்லை. அவருள்ளம் இளமைப் பருவத்திலேயே இன்னிசை நிறைந்த கவி களைப் படிப்பதிலும் பாடுவதிலும் ஈடுபட்டிருந்தது. இவர் சட்டக் கல்வி பயிலுவதற்காக இங்கிலாந்து சென்று, அது தன் மனநிலைக்கு ஒத்து வாராததால் தமது தாய் நாட்டுக்குத் திரும்பினர். பின்னர், கவி கள் இயற்றுவதே அவருக்குப் பொழுது போக்காக விருந்தது; அக்கவிகளின் வாயிலாக அவர் தமது இரஸிகத் தன்மையையும் தேச பக்தியையும் ஒரு ங்கே வெளியிடத் தொடங்கினர். நாளடைவில் அவ ரது கவிகள் இயற்கை யழகுகளையும் உயர்ந்த கருத்

துக்களையும் சமரச சன்மார்க்கக் கொள்கைகளையும் வெளியிட்டு வந்தன.

**கீதாஞ்சலி** யென்ற பெயர் புனைந்த பாசுரங்கள் வங்க மொழியினின்றும் ஆங்கில வாசகமாகப் பெயர்த்தெழுதப்பட்டவுடன், அவ்வொப்புயர்வற்ற கவிகளின் அருமை பெருமைகளை அந்நிய நாட்டினரும் ஒருவாறு அறிந்து அனுபவிப்பாராயினர். 1913-வது ஆண்டில் இலக்கியச் சார்பாக உலகத்திற் சிறந்த பெரும் புலவருக்கே யளிக்கப்படும் **நோபல் பரிசு** ரவீந்திரநாதருக்கு அளிக்கப்பட்டது. அதன் பயனாகத் தமக்குக் கிடைத்த 8,000 பவுனையும் தாம் **போல்பூர்** என்னுமிடத்தில் நடத்திவரும் **விசுவபாரதி** என்னும் பல்கலைக் கழகத்திற்குக் கொடுத்துவிட்டார். இப்பல்கலைக் கழகத்தின் வளர்ச்சிக் கின்றியமையாத பொருளாதார வசதிகளை யமைக்கும் பொருட்டு இவர் நமது தேசமெங்கும் யாத்திரைசெய்து சிந்தைக்கும் செவிக்குமினிய உபந்யாசங்கள் செய்து, பொருள் சேர்த்து வந்தார்.

இவர் உலகமெங்கும் யாத்திரைசெய்து அமெரிக்கா, ஜப்பான், ருஷியா முதலிய விடங்களிலும் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ளார். இவரது பேச்சும் கவிதையைப்போல் கேட்போருக்கு இன்பம் தருவதாகும். இங்கிலாந்தில் இவர் செய்த '**ஹிபர்ட்' பிரசங்கங்கள்** ஆங்கில அறிஞர்களால் மிகவும் சிறந்த சொற்பொழிவுகளாக மதிக்கப்பெற்றன. பிரசங்கம் செய்வதைப்போல் கட்டுரைகள் வரைவதிலும் இவருக்கு விசேஷமான திறமையுண்டு. சுவைக் களஞ்

சியமான சிறுகதைகள் எழுதும் ஆற்றலும் இவர் பால் விசேஷித்துக் காணப்படுகிறது. இவர் இயற்றி



மகா கவி ரவீந்திர நாதர்

யுள்ள சிறுகதைத் தொகுதிகளும் இவருடைய இதர நூல்களுக்கு எவ்விதத்திலும் இணையாயிருப்பன வென்றே அறிஞர்கள் கருதுகின்றனர்.

கல்கத்தாவிலுள்ள பல்கலைக் கழகம் ரவீந்திரருக்கு இலக்கியப் பெரும் புலவரென்று பொருள் படும் **டாக்டர்** பட்டத்தை யளித்திருக்கிறது. இந்திய அரசாங்கமும் இக்கவிஞரின் பெருமையையறிந்து இவருக்கு **ஸர்** என்னும் பட்டத்தைவழங்கியது; ஆனால் 1919-ம் ஆண்டில் இவர் அப்பட்டம் தமக்கு வேண்டாமென்று சொல்லி அதைத் துறந்தார். 1931-ம் வருஷத்தில் ரவீந்திர நாதரது 70-ம் ஆண்டு பிறந்த நாள் விமரிசையாக உலகின் பல பாகங்களிலும் கொண்டாடப்பட்டது. அவ் வாண்டுத் திருநாளில் கவிமன்னர் தாகூர் விடுத்த செய்தியில், இயற்கையின் வாயிலாக இறைவனை உணரும் பேரன்பு அவசியமானதென்றும், அவ்வன்புக்குத் தேசம் முதலிய கட்டுகள் இல்லையென்றும், இந்தியா உலக சகோதர நேசத்திற்காகப் பாடுபட வேண்டுமென்றும் கூறியுள்ளார்.

ரவீந்திரநாத தாகூர் ஆசியாக் கண்டத்தின் மத்திய பாகத்தில் அமைந்துள்ள **பாரசீகம் இராக்** முதலிய நாடுகளுக்கு விஜயஞ்செய்து முக்கிய கிராமங்களையும் நகரங்களையும் சுற்றிப் பார்ப்பதில் சுமார் மூன்றுமாத காலம் கழித்தார். பாரசீகத்தின் தலைநகராகிய **டெஹரானில்** பாரசீக அரசராகிய **ஷா மன்னர்** கவிஞர் பெருமானுக்கு ஓர் ஆடம்பரமான விருந்தளித்தார். பாரசீக நாட்டு மந்திரிகளும் இதர அதிகாரிகளும் பிரபுக்களும் பொது ஜனத் தலைவர்களும் பேராசிரியர்களும் விருந்துக் கூட்டத்திற்கு வந்திருந்தனர். **இராக்** ராஜ்யத்திலுள்ள முக்கியமான

நகரமாகிய பாக்தாத் நகரத்தில் அந்த இராஜ்யத்தின் அரசராகிய பெய்ஸேல் மன்னரும் கவியரசருக்கு விசேஷ மரியாதை செலுத்தினர். ஈராக் தேசத்திலுள்ள ஷேக்ஸ்-ஹெயில் என்னும் அராபியத்தலைவரும் தாகூரைக் குதூகலமாக வரவேற்று உபசரித்தார்.

கவிதாகூர் நீண்டு நரைத்த தாடியும் கூர்மையான கண்களுமுடையவர். அவருள்ளத்தில் தேசபக்தி நிறைந்திருக்கிறது; எனினும் ஆரவாரமும் ஆவேசமும் நிறைந்த கிளர்ச்சிகளில் நம்பிக்கையுடையவரல்லர். சாதிப் பூசல்களை அவர் வேம்பென அருவருப்பவர்; தியாகம் செய்வதே இறைவனையடைவதற்குரிய இராஜவழி யென்பது அவர்கருத்து. 'மனிதனை மனிதன் ஏமாற்றலாம்; ஆனால் இறைவனை நாம் ஏமாற்ற வியலாது' என்பது கவிதாகூரின் திடமான நம்பிக்கை. இவருக்கு நோபல் பரிசு கிடைப்பதற்கு ஏதுவாகவிருந்த கீதாஞ்சலியில், தாகூரடிகள் கடவுளைக் குறித்துக் கொண்டுள்ள சாரமான கொள்கைகள் மிகவும் அழகாக வெளியிடப் பெற்றுள்ளன. இறைவன் அடிகளைத் தரித்திரர்களும் தாழ்ந்தவர்களும் வாழுமிடத்திலே காணலாம் என்பது இவரது விசேஷமான கொள்கைகளில் ஒன்று.

மனிதவர்க்கத்தில் அறிவு முதிர்ச்சியில்லாதவர்களே மிக்க துரதிர்ஷடசாலிகளென்றும், அவர்களிடம் அறிஞர்கள் அநுதாபம் காட்டி அவர்களைச் சீர்படுத்த முன்வர வேண்டுமென்றும், அவர்களைக் கவனியாது அசட்டை செய்வது பெரும் பாவமென்றும் ரவீந்திரநாதர் கூறியுள்ளார். அதிர்ஷ்டவசமா

கக் கல்வியறிவைப் பெற்றிருப்போர் தங்கள் சகோதரர்களுக்கு அறிவைப்போதிக்கும் புனிதமான பணியில் ஈடுபட்டுழைப்பது உலகமுன்னேற்றத்திற்குரிய பெருநெறியாகுமென்பது தாகூரடிகளின் தேர்ந்த கொள்கை.

நமது நாட்டிலுள்ள சாதிபேதங்களைக் குறித்தும் நமது நாட்டிற்கு அவசியமான சமூகச் சீர்திருத்தத்தைக் குறித்தும் கவிதாகூர் கூறுவதாவது:—

“உலகம் ஆரம்பமான காலமுதல் மானிடர்களில் ஒரு சாரார் தாங்கள் உயர்ந்தோர் என்றும், பிறர் தம்மைவிடத் தாழ்ந்தவர்களென்றும் கர்வங்கொண்டு அவர்களை அடிமைப்படுத்தி வந்திருக்கின்றனர். இது எத்துணைப் பழைய வழக்கமா யிருப்பினும், மனிதத் தன்மையற்றதென்றே நாம் கூறுவோம்............தனிப்பட்ட மனிதர்களிடையே சமத்துவம் காணமுடியாதென்பது உண்மையே; ஆனல் ஒரு ஜாதியார் மற்றொரு ஜாதியாரைவிடத் தாழ்ந்தவரென்று எண்ணுவது பாதகமாகும். நாம் ஒரு சாராரைக் கேவலமான அடிமைகள்போல் ஒதுக்கியதால் நமது பலம் குன்றியது............நாளடைவில் ஒழிந்துபோகும் தன்மை வாய்ந்த பிளவுகளை நாம் நமது பிற்போக்கால் நிலைநாட்டி வந்திருக்கிறோம்....
........சமூகச்சீர்திருத்தம் எத்துணை அவசியமும் அவசரமுமான காரியமென்பதை நாம் இதுவரையில் கவனிக்கவில்லை.”

தாகூரடிகளின் **விசுவபாரதி** யென்ற பல்கலைக் கழகம் அமைந்துள்ள இடத்தைச் **சாந்தி நிகேதன ஆச்**

**சிரமம்** என்று கூறுவதுண்டு. அங்கே மாணுக்கர்கள் கவிஞர் மேற்பார்வையில் கல்வி பயின்று உத்தம குணங்களைப் பெறுகின்றனர். காலையுணவானதும் ஆசிரியர்களும் மாணவர்களும் கவியரசரின் இன்னிசைப் பாடல்களிற் சிலவற்றைப் பாடிய பின்னர், அவரவர்களின் வகுப்புக்களுக்குச் செல்லுகிருர்கள். காலநிலை இடங்கொடுக்குமாயின், வகுப்புக்கள் சோலையாக அடர்ந்திருக்கும் மரங்களின் நிழலிலே நடைபெறுகின்றன. இயற்கையோடிசைந்த இக் கல்விப் பயிற்சியில் அறிவு வளர்ச்சி பெறுவதுடன் உடம்பும் வளர்ச்சி பெறுகின்றது. இவ்வாச்சிரமத்தில் உலகின் பல பாகங்களிலுமிருந்து கல்வியறிவிற் சிறந்த பெரியோர்கள் ஆசிரியர்களாக வந்திருப்பதால், அவர்களது சகவாசம் மாணுக்கர்களை விரிந்த நோக்கமுள்ளவர்களாக்கி விடுகிறது.

---

## 16. நடுவேனிற் கனவு

(ஷேக்ஸ்பியர் நாடகக் கதைகளில் ஒன்று)

**கிரீசு** தேசத்தின் தலைநகரமாகிய **ஆதென்ஸ்** நகரத்தில் ஒருகாலத்திலே பெண்கள் தங்கள் விருப்பத்திற்கு இசைந்த கணவரை மணஞ்செய்து கொள்ளலாகாது என்றும், பெற்ரேரால் தேர்ந்தெடுக்கப் பெறும் புருஷனையே அன்னர் மணந்துகொள்ள வேண்டுமென்றும், ஒரு சட்டம் இருந்தது. அக் கொடிய சட்டத்தின்படி பெற்ரேர் குறிப்பிடும் புருஷனை மணஞ் செய்துகொள்ள மறுக்கும் பெண்

ணுக்கு மரணதண்டனைகூட விதிக்கப்படலாம்; அன்றேல் அவள் மணமேயின்றி ஒரு கன்னி மடத்தில் காலங்கழித்தல் வேண்டும்.

**தீஸியஸ்** என்பவன் அந்நகரத்தில் அரசு செலுத்திவந்த காலத்தில், **ஈஜியஸ்** என்னும் முதியோனுக்கு **ஹெர்மியா** என்னும் புதல்வி ஒருத்தி இருந்தாள். அந்நகரத்துப் பிரபு குலத்தில் தோன்றிய **டெமீட்ரியஸ்** என்பவனை அவள் மணஞ்செய்துகொள்ள வேண்டுமென்பது அவள் தந்தையின் அபிப்பிராயமாகவிருந்தது. புதல்வியோ **லைஸாண்டர்** என்னும் இளைஞன்மீது காதல்கொண்டு அவனையே மணந்துகொள்வதாகத் தீர்மானித்திருந்தாள். எனவே மேற்குறித்த சட்டத்தின்படி **ஈஜியஸ், தீஸியஸ்** என்ற அரசன்முன் தன் மகள்மீது 'பிராது' செய்துகொண்டான்.

அரசன் அதைக் குறித்து விசாரணை செய்துவருகையில் ஹெர்மியா அவனை நோக்கி 'அரசே, என் தந்தையார் குறிப்பிடும் டெமீட்ரியஸ் என் தோழியாகிய **ஹெலின** என்பவளை மணப்பதாகக் கூறியதால், அவரது வாக்கை நம்பி ஹெலின அவர்மீது காதல் கொண்டிருக்கிறாள். இங்ஙனமிருக்க, யான் அவரை மணத்தல்முறையோ?' என்று விண்ணப்பஞ் செய்துகொண்டாள். அது சரியான காரணமென்று அரசன் நம்பியபோதிலும், தேசச் சட்டத்திற்கு மாறாக அவனால் ஒன்றும் செய்ய இயலவில்லை. அவன் உடனே தீர்ப்புச் சொல்லாமல் ஹெர்மியாவை நோக்கி, "உனக்கு நான்கு நாள் அவ

காசம் தருகிறேன். இதற்குள் நீ உன் தந்தையின் விருப்பத்திற்கு இணங்காவிடில் உன் வாழ்நாளெல்லாம் கன்னிகையாகவே காலங்கழித்தல் வேண்டும். அல்லது மரண தண்டனை அடையவேண்டும்'' என்று எச்சரிக்கை செய்தான்.

ஹெர்மியா தனக்கு வரப்போகும் ஆபத்தைக் காதலனை லைஸாண்டருக்கு அறிவித்தாள். அவன் இடியேறுண்ட நாகம்போல் நடுங்கி, “பெண்ணே, இந்நகரத்திற்கு இருபது மைல் தூரத்திலுள்ள ஊரில் பெருஞ் செல்வியான என் அத்தை இருக்கிறாள். அவ்வூரில் இச்சட்டம் செல்லாது. நாம் அங்கே சென்று மணஞ்செய்துகொள்வோம். இந்நகரத்திற்கு வெளிப்புறத்துள்ள காட்டில் நீ இன்றிரவு என்னைச் சந்திக்க வேண்டும்'' என்று அவளிடம் கூறினான். ஹெர்மியாவும் அவ்வாறே செய்வதென்று தீர்மானித்து அந்த ஆலோசனையைத் தன் தோழியாகிய ஹெலினாவுக்கு மாத்திரம் தெரிவித்தாள். அவள் அந்த இரகசியத்தைத் தன் காதலனாகிய டெமீட்ரியஸுக்கு அறிவித்தாள்.

டெமீட்ரியஸ் ஹெலினாவைக் கைவிட்டு எப்படியாவது ஹெர்மியாவையே மணந்து கொள்ளவேண்டுமென்று கொஞ்ச காலமாக நிச்சயித்திருந்ததால், ஹெர்மியா தப்பிக்கொண்டு போகாமல் தடுக்கும் வண்ணம் அவனும் அவளைப் பின்பற்றிக் காட்டிற்குப் போகவேண்டுமென்று தீர்மானித்தான். அவன் அப்படிச் செய்வானென்று ஹெலினாவுக்குத் தெரிந்திருந்தும் தானும் அவனைத் தொடர்ந்து செல்

வதால் ஒருவிதமான திருப்தியையும் உவகையையும் அடையக்கூடுமென்று கருதியே ஹெலினு தன் தோழியின் இரகசியத்தை அவனுக்கு வெளியிடத் துணிந்தாள்.

ஆதென்ஸ் நகரத்தின் புறத்தேயிருந்த காடு, வனதேவதைகளின் உறைவிடமாகவிருந்தது. அவை நடு நிசியில் தங்கள் அரசனை **ஓபிரான்** என்பவ னேடும் அரசியான **டிடானியா** என்பவளோடும் அக்காட்டகத்தே களித்துக் கூத்தாடுவதுண்டு. ஆனுல் குறித்த காலத்தில் அரசனுக்கும் அரசிக்கு மிடையே விசேஷ மனஸ்தாபம் ஏற்பட்டிருந்தது. டிடானியாவின் தோழி ஒருத்தி ஒரு பிள்ளையை வைத்துவிட்டு இறந்துபோனதால், அப்பிள்ளையை டிடானியா வளர்த்து வந்தாள். அவனைத் தனக்குப் பணியாளனுகக் கொடுத்துதவும்படி ஓபிரான் கேட் டும் அரசி மறுத்துவிட்டதால், அவர்கள் இருவரும் சச்சரவு செய்யத் தொடங்கினர். இதனுல் காட்டிலே வனதேவதைகள் ஆடிப்பாடி ஆனந்தமாக விருக் கும் வழக்கம் கொஞ்சகாலமாக நின்று போயிற்று.

ஹெர்மியா லைஸாண்டரைச் சந்திக்க உடன் பட்டிருந்த இரவில், டிடானியா தன் பரிவாரங்க ளோடு காட்டின் ஒரு பகுதியில் நிலா வெளிச்சத் தில் உலாவிக்கொண்டிருந்தாள். அச்சமயம் ஓபிரா னும் தன் பரிஜனங்களோடு தற்செயலாக அங்கு வந்து சேர்ந்தான். அவன் கோபங்கொண்டு அரசி யை நோக்கி, 'நாளைப் பொழுது விடியுமுன் உன்னை என்ன பாடுபடுத்துகிறேன், பார்' என்றுகூறினுன்.

அரசியும் கோபத்தோடு அவ்விடத்தைவிட்டு அகன்ருள். பிறகு ஓபிரான் தன் பிரதானியாகிய **பக்** என்ற பிசாசை அழைத்து '**மனமோகினி** என்னும் மலரைக் கொண்டுவா. அதன் சாற்றை டிடானியா தூங்குகையில் அவள் புருவத்தின்மீது தடவப்போகிறேன்' என்று சொன்னன்.

அவ்விதமாகச் செய்தால், தூங்கி விழிப்பவர் எத்தகைய பிராணியை முதன்முதல் பார்த்தபோதிலும் அதன்மீது காதல் கொள்வார்கள் என்பதை ஓபிரான் அறிந்திருந்தான். அக்காதலைப் போக்குவதற்குரிய மாற்று மூலிகையும் அவனுக்குத் தெரிந்திருந்தது: இத்தகைய உபாயத்தால் அரசியைப் பரிகாசத்திற்கும் பரிதாபத்திற்கும் உரிய நிலைக்குக் கொணர்ந்து தான் விரும்பிய பையனைப் பெற்றுக் கொள்ளலாமென்று அவன் கருதினன். அரசனது நோக்கத்தை அறிந்த பக் என்பவன் குறித்த மோகன மலரைத் தேடிச் சென்ருன்.

அச்சமயம் டெமீட்ரியஸும் ஹெலினவும் அக் காட்டிற்குள் நுழைந்தார்கள். ஹெலின அன்பார்ந்த மென்மொழிகளால் தன் காதலனிடம் குறைகளை முறையிடுவதையும் டெமீட்ரியஸ் அவளை இகழ்ந்து வசைமொழி கூறிக் கோபிப்பதையும் பேயரசனை ஓபிரான் கேட்டுக்கொண்டிருந்தான். அவன் ஹெலினவின் நிலைகண்டிரங்கி அவளுக்குத் தன்னலியன்ற உதவிசெய்ய வேண்டுமென்று தீர்மானித்தான். அப்பொழுது மோகன மலரும் கையுமாகத் திரும்பிவந்த **பக்**கைக் கண்டு மகிழ்வெய்தி, 'இம்மலரில் ஒரு பகு

தியை நீ எடுத்துக்கொள். இங்கே இளமங்கை யொருத்தி வன்மனங்கொண்ட காளையொருவன்மீது மோகங்கொண்டு வந்திருக்கிருள். அவன் உறங்குஞ் சமயம் பார்த்து அவன் கண்ணில் இதன் இரசத் தைப் பிழிந்துவிடு. அப்படிச் செய்யும்போது அப் பெண் அவனுக்கருகே யிருக்கவேண்டும்; அப்படி யாஞல்தான், அவன் கண்ணைத் திறக்கும்போது அவளையே முதன்முதலிற் பார்த்தல்கூடும்' என்று பேயரசன் பணித்தான்.

பக் என்பவன் அரசனுணையைச் சிரமேல் தாங்கி மோகன மலரில் ஒரு பகுதியை எடுத்துச் சென்ருன். மீதியாகவுள்ளதை ஒபிரான் எடுத்துக்கொண்டு டிடா னியாவின் சோலைக்குச்சென்று அவள் உறங்குகை யில் அவளுடைய புருவத்தின்மீது இரசத்தைப் பிழிந் தான். இது நிற்க. ஹெர்மியா தன் தந்தையின் வீட்டை விட்டுக் காட்டுக்குள் நுழைந்ததும், அவளது காதலனை லைஸாண்டர் அவளை அங்கே சந்தித் தான். இருவரும் கூடி அக்காட்டின் வழியே செல்லு கையில் ஹெர்மியா பெரிதும் களைப்புற்று வாடி வருந்திஞள். இதை அறிந்த லைஸாண்டர் அவளை நோக்கி, "இனி இவ்விரவில் உன்னல் வழி நடத்தல் இயலாது. நீ இவ்விடத்தில் படுத்துறங்கு; பொழுது புலர்ந்ததும் எழுந்து நடப்போம்" என்று கூறிஞன். சிறிது தூரத்தில் அவனும் தரையிற் படுத்துறங் கிஞன்.

அவர்கள் அயர்ந்து உறங்கிக்கொண்டிருக்கை யில் பக் அங்கேவந்து சேர்ந்தான். தன் எஜமானன்

தேடிப் பார்க்கச் சொன்ன காதலியும் அவளுக்கு இணங்காத இளைஞனும் அவர்களே யென்று கருதி, அவ்விளைஞனுடைய கண்ணில் மோஹன ரஸத்தைப் பிழிந்துவிட்டுத் திரும்பினன். லைஸாண்டர் விழித்துக்கொண்டபோது ஹெலினா அவ்வழியே வந்ததால் அவன் அவள்மீது மோகங்கொண்டு ஹெர்மியாவைக் கைவிடத் துணிந்து அவளைத் தனியே காட்டில் விட்டுச் சென்றான்.

ஹெலினாவை வெறுத்த டெமீட்ரியஸ் அவளை நடுக்காட்டில் விட்டு ஓடிப்போனதால், அவள் தனியே யிருந்து காட்டு மிருகங்களுக்கு இரையாவதினும் அவனைத் தொடர்ந்து சென்று அவன் கண்முன் உயிர் விடுவதே நலமெனக் கருதினாள். எனினும் அவனுக்குச் சரியாக ஓடமுடியாமல் பிந்திவிட்டதால், டெமீட்ரியஸ் அவள் கண்ணில் தென்படாமல் ஓடி மறைந்தான். பிறகு அவள் திக்கற்றுத் திகைத்து அங்கு மிங்கும் அலைந்து திரிகையில், லைஸாண்டர் இருந்த இடத்தின் வழியாக வந்ததும், அவன் விழித்தெழுந்து இவளைப் பார்த்து மோகன ரஸத்தின் பயனாகத் தான் அவள்மீது கொண்ட மோகத்தை வெளியிட் டுரைத்தான்.

அவன் தன்னைப் பரிகசிப்பதாகக் கருதிய ஹெலினா, "டெமீட்ரியஸ் என்மீது அன்புடன் ஒருவார்த்தையும் பேசாததுன்பம் எனக்குப் போதாதா? நீயும் என்னை ஏசவேண்டுமா?" என்று மனம் நொந்து கூறிக் கோபத்தோடு ஓட்டம் பிடித்தாள். ஹெர்மியாவை முற்றும் மறந்த லைஸாண்டர் ஹெலினாவின்

பின்னே ஓடினன். ஹெர்மியா விழித்துக்கொண்டு லைஸாண்டரைக் காணுமல் திகிலும் துக்கமுமடைந்து அக்காட்டில் அவனைத் தேடியலைந்தாள். ஹெர்மியாவையும் லைஸாண்டரையும் காணுமல் அங்குமிங்கும் தேடித்திரிந்த டெமீட்ரியஸனும் களைப்புற்று ஓரிடத்தில் அயர்ந்து உறங்கிக் கொண்டிருந்தான்.

தன் பிரதானியாகிய பக் மோஹன ரசத்தைத் தவருக வேறொருவன் கண்ணில் பிழிந்துவிட்டானென்பதை அறிந்துகொண்ட ஓபிரான், தான் முதலில் உத்தேசித்த மனிதனுகிய டெமீட்ரியஸை இப்பொழுது கண்டுபிடித்து அவன் கண்ணில் மோஹன ரசத்தைப் பிழிந்தான். விழித்துப்பார்க்கும் சமயத்தில், ஹெலினு அவன் கண்ணுக்கு இலக்கானதால் அவன் அவள்மீது மோகங் கொண்டான். அத்தருணத்தில் லைஸாண்டரை எப்படியோ கண்டுபிடித்து அவனைப் பின்பற்றி ஹெர்மியாவும் அங்கு வந்து சேர்ந்தாள். லைஸாண்டரும் டெமீட்ரியஸனும் மோஹன ரஸத்தின் மயக்கத்தினுல் ஹெலினுவையே காதலித்து மணம் வேண்டினுர்கள். அதைக்கண்டு பெரு வியப்புற்ற ஹெலினு, அவர்களும் ஹெர்மியாவும் சேர்ந்து தன்னைப் பரிகசிப்பதாகவே யெண்ணினுள். தன்னையே காதலித்துக் கொண்டிருந்த இருவரும் இப்பொழுது தன்னை மறந்து திடீரென்று ஹெலினுவின்மீது மோகம் கொண்டதைக் கண்டு ஹெர்மியாவும் திகைத்து நின்ருள்.

இவ்விஷயமாக ஹெர்மியாவுக்கும் ஹெலினுவுக்குமிடையே வாக்குவாதம் ஏற்பட்டு, அது பரஸ்

பர நேசம் பூண்டிருந்த அவர்களுக்குள் விரோத மாக முதிர்ந்தது. ஹெலினவின்மீது மோகங்கொண் டிருந்த ஆடவரிருவரும் தங்களுக்குள் போர் செய்து வெல்லுகிறவன் அவளை மணப்பதெனச் சங்கேதம் செய்துகொண்டு அக்காட்டுக்குள் போர்செய்வதற்கு வசதியான ஓரிடத்தை நாடிச் சென்றனர். இந் நிகழ்ச்சிகளை யெல்லாம் கவனித்துக் கொண்டிருந்த பேயரசன் தன் பிரதானியாகிய பக்கைப் பார்த்து "நீ மூடு பனியைப் பெய்வித்து, போர் செய்யச் சென்ற புருஷர்களை ஒருவரையொருவர் கண்டு கொள்ளாமல் செய்துவிடு. மேலும் ஒவ்வொருவ னிடத்திலும் மற்றொருவன் குரலில் கடுமையாக இகழ்ந்து பேசி அவர்களை வேறுவேறு வழியிற் பிரித்துக்கொண்டு போ. அவர்கள் களைப்புற்று அயர்ந்து உறங்கும்போது இம்மாற்று மலராகிய மோக நிவாரணியின் இரசத்தை லைஸாண்டரின் கண்ணிற் பிழி. இதனல் அவன் விழித்துக்கொண் டதும் ஹெலினவின்மீது கொண்ட மோகத்தை மறந்து முன்போல் ஹெர்மியாவையே காதலிப்பான். டெமீட்ரியஸுக்கும் ஹெலினவுக்கும் இப்பொழுது தோன்றியுள்ள நேசம் இப்படியே நிலைபெற்றிருக்க வேண்டும்" என்று கூறினன்.

பிறகு ஓபிரான் அரசியாகிய டிடானியா உறங் கிக் கொண்டிருந்த இடத்திற்கு மீண்டும் சென்றான். அவ்விடத்திற்குச் சிறிது தூரத்தில் நாட்டுப்புறத்தா னொருவன் வழி தப்பி வந்து உறங்கிக்கொண்டிருந் தான். ஓபிரான் கழுதையின் தலையொன்றை யெடு

த்து அவன் தலைமீது ஒட்ட வைத்து அது அவனுக்குப் பொருந்தி யிருந்தது கண்டு சந்தோஷித்தான். நாட்டுப் புறத்தான் விழித்துக்கொண்டு தனக்கு ஏற்பட்ட மாறுதலை யறியாதிருக்கையில், டிடானியாவும் விழித்துக்கொண்டு மோகனரசத்தின மயக்கத்தினால் அவன்மீது மையல் கொண்டாள்.

இச்சமயத்தில் ஒபிரான் அவள் கண்முன் தோன்றி அவளைப் பரிகசித்து அவளுடைய வளர்ப்புப் பிள்ளையைத் தனக்குக் கொடுக்கும்படி கேட்டான். அவள் பெரிதும் வெட்கமடைந்து அப்பிள்ளையை அவனிடம் உடனே ஒப்புவித்துவிட்டாள். தனது நோக்கம் நிறைவேறியதும், பேயரசனுக்குப் பேயரசிமீது கருணை தோன்றியது. அவன் மோக நிவாரண ரசத்தை அவள் கண்ணிற் பிழிந்து மோகந் தெளிவித்ததும், அரசி மனித உடலும் கழுதைத் தலையுமமைந்த விகார ரூபத்தை வெறுத்து விலக்கினாள். பிறகு ஒபிரான் நாட்டுப்புறத்தானுடைய கழுதைத் தலையைப் பிரித்தெடுத்து அவனை முன் போலிருக்கும்படி செய்தான். பிறகு அரசனும் அரசியும் மானிடக் காதலர்களின் நிலையை அறிந்து கொள்ளுமாறு புறப்பட்டார்கள்.

டெமீட்ரியஸும், லைஸாண்டரும், ஹெர்மியாவும், ஹெலினாவும் தனித்தனியே உறங்கிக்கொண்டிருந்தார்கள். பக் ஜாக்கிரதையாக அவர்களை அவ்வாறு ஓரிடத்தில் அவர்களுக்குத் தெரியாமலே கூட்டி வைத்து ஒபிரான் ஆணைப்படி லைஸாண்டர் கண்ணில் மோக நிவாரண ரஸத்தைப் பிழிந்திருந்-

தான். அவர்களுள் முதன் முதல் விழித்துக்கொண்ட ஹெர்மியா சிறிது தூரத்தில் லைஸாண்டர் உறங்குவதைக் கண்டு தன் காதலன் தன்னை வெறுக்க நேர்ந்த விபரீதத்தை நினைந்து மனம் நைந்து அவனை நோக்கிக் கொண்டிருந்தாள். அப்பொழுது அவனும் கண்ணை விழித்து அவளைக் கண்டு உள்ளன்போடு உரையாடலுற்றான். அப்படி உரையாடிக் கொண்டிருக்கையில் ஹெலினவும் டெமீட்ரியஸும் விழித்துக்கொண்டனர். உறக்கத்தால் மன்வமைதியுற்ற ஹெலினவுக்கு டெமீட்ரியஸ் வெளியிட்ட அன்பு ஆச்சரியத்தையும் ஆனந்தத்தையும் ஒருங்கே விளைத்தது. ஹெர்மியாவும் ஹெலினவும் முன்போல் தோழிகளாயினர்.

டெமீட்ரியஸுக்கு ஹெர்மியாவின் மீது ஏற்பட்டிருந்த மோகம் இப்பொழுது நீங்கிவிட்டதால், அவள் லைஸாண்டரை மணப்பதற்கு அவளது தந்தை இசையும்படி செய்விக்க வேண்டுமென்று உறுதிகொண்டான். அந்நிலையில் ஹெர்மியாவைத் தேடிக்கொண்டு ஈஜியஸ் அங்கேவந்து சேர்ந்தான். டெமீட்ரியசின் மனநிலையை யறிந்தபின், தன் புதல்வியை லைஸாண்டர் மணப்பதற்கு அவனும் அனுமதி அளித்தான். எனவே அவளைத் தண்டிப்பதற்காக அரசன் குறித்திருந்த நான்காம் நாள், ஹெர்மியாவுக்கும் லைஸாண்டருக்கும் மணம் இனிது நிறைவெய்தியது; அன்றே டெமீட்ரியஸும் ஹெலினவுக்கு மணமாலை சூட்டினன். இத்திருமண வைபவங்கள் நடைபெற்ற தினத்தைப் பேயுலகத்தினரும் சிறக்கக் கொண்டாடினர்கள்.

## 17. மெய்யொழுக்கம்

மேற்றிசையாராகிய ஐரோப்பியர் கீழ்த்திசையாகிய ஆசியர் மேற்கூறும் குறைகளில், கொள்கைக்கும் செய்கைக்கும் பொருத்தமின்றி ஒழுகுந் தன்மை முக்கியமான தொன்றாகும். ஆசியன் அஞ்ஞானத்தின் அடிமையென்றும், அறிவுதெளிந்து மனமொப்பிய உண்மைக்கும் மாறாக நம்பத்தக்கவன் என்றும், உதாரணமாகப் புவிசந்திர சாயைகளால் கிரகணங்கள் நிகழ்வதை அறிந்து அவை நேருங்காலங்களைப் பல்லாண்டுகளுக்குமுன்னரே ஒரு நிமிடமும் தப்பாது கணிக்கவல்ல சோதிட வித்துவானும், தன்னறிவெல்லாம் ஒருபாற் கிடக்க,கிரகணங்கள் இராகு, கேதுகளின் தீச்செயலால் உண்டாவதாக நம்பி, அவ்வமயங்களுக்கு விதிக்கப்பட்ட கிரியைகளை விடாது சிரத்தையோடு செய்வானென்றும், மேனாட்டுப் புலவர் சிலர் கூறியுள்ளார். ஐரோப்பியரிடத்தும் இக்குற்றம் உளதோ என்பதை ஆராய்ந்து அதை எடுத்துக் காட்டுவதினும், அவர் கூற்றை மேற்சென்றிடிக்கும் நட்புரையாகக்கொண்டு, நம்மவர் ஒழுக்கத்தையே உற்று நோக்கி வேண்டியவாறு திருத்த முயல்வதே அதிகப் பயன் தருமன்றோ? மனச்சான்றோடு முரணிய ஒழுக்கம், மனமொப்பியதினும்இழுக்குடைத்தென்பதை நியாயங்கூறித் தெளிவிக்கப் புகுதல் அறிவாளருக்கோர் அவமதிப்பாம்.

"ஊருடன் ஒத்து வாழ்" "நிர்வாண தேசத்திலே கோவணங் கட்டியவன் பைத்தியக்காரன்," என்று நமக்குள் வழங்குவன போலவே, மேனாட்டிலும்,

"உரோமபுரியில் உரோமரைப்போல் ஒழுகு," "அஞ்ஞானம் ஆநந்தமாகுமிடத்தில், ஞானம் மதியீனமாம்" என்று பழமொழிகள் நடைபெறுகின்றன. ஆழ்ந்து ஆலோசிக்குங்கால், ஒவ்வொரு மனிதனும் தன்தன் மனமொப்பியபடியே எல்லா விஷயங்களிலும் ஒழுகுவானாயின், பல்லோர் கூடிய ஜனசமூக நாகரிக வாழ்க்கை ஒரு கணப்பொழுதும்நிலைப்பெறாதென்பது நன்கு விளங்கும். பல்வேறு ஜனசமூகங்களை ஒப்பிட்டு நோக்குங்கால், நாகரிகம் பெருகப் பெருகத் தன் மனப்படி யொழுகும் சுதந்திரம் குறைந்து வருவதைக் காணலாம். அதிமேதாவியாய் விளங்கிய ஆங்கிலக் கலைஞர் ஒருவர் கூறியுள்ளதிது:-

"என் அண்டை வீட்டுக்காரன் விஷசுர முதலிய நோய்களை எனக்கு உண்டாக்கக்கூடிய அளவு யான் உட்கொள்ளும் காற்றைத் தன் வீட்டுச் சாக்கடைகளின் அசுத்தத்தால் கெடுப்பானாகில், ஒரு துப்பாக்கியை நீட்டி என்னைச் சுட்டு விடுவதாகப் பயமுறுத்தினால் எப்படியோ அப்படியே உயிர் வாழ்வதற்குரிய என் சுதந்திரத்தைக் குறைக்கின்றான். தன் குழந்தைக்கு வைசூரி குத்தாமல் அவனிஷ்டப்படி வளர்க்கலாமென்றிருந்தால், என் குழந்தைகள் கண்டெடுத்து உண்ணுமாறு விஷங்கலந்த அப்பங்களை வைக்கலாமென்றும் இருக்கலாம்; அவர்களைப் படிப்பிக்காமலும் ஜீவனோபாய முறைகளில் பயிற்றாமலும் அவன் வளர்த்துவரின், சிறைச்சாலைகளையும் வேலைக்கூடங்களையும் சம்ரக்ஷணை செய்தற்கு வேண்டிய பணவரிச் சுமையை அதிகரித்து, என் சுதந்திரத்

தைத் தன்னுலியன்ற மட்டும் குறைப்பவனுகின்ருன். ஜனசமூகத்தின் நாகரிகம் எத்துணை யுயர்ந்ததோ, அத்துணை அச்சமூகத்தில் ஒவ்வொருவன் செயல்களும் மற்றெல்லோரையும் பாதிக்கின்றன. அத்துணை, மற்ருேரது சுதந்தரங்களைக் குறைக்காமல் யாவனுயினும் ஒரு மனிதன் தவறியொழுகுதல் அருமை யாகின்றது."

ஆகவே முற்றும் துறந்து தனித்தனியே காடுகளில் வசிக்கும் துறவிகளுக்கன்றி மனம்போன்ற ஒழுக்கம் கைகூடாததாகின்றது. வேந்தனையும் துரும்பென்று மதித்துத்திரியும் துறவிகளுங்கூட நாடு நகரங்களில் சஞ்சரிக்குங்கால் உலக வழக்கங்களைச் சிறிது அனுசரிக்க வேண்டியதாகின்றது.

"வானுயர் தோற்றம் எவன் செய்யும் தன்னெஞ்சம்
தானறி குற்றப் படின்"

என்று உசாவிய நாயனுரும் உலகத்தோ டொட்டிய ஒழுக்கத்தைச் சிறப்பித்திருக்கின்ருர். "உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே" என்றெண்ணியே அவர் இவ்வாறு சிறப்பித்தார் போலும். அஃதெங்ஙனமாயினும், உலகத்திலே யான் மட்டும் ஓரபிப்பிராயமும் என்னை யொழிந்த மற்றெல்லோரும் பிறிதோரபிப்பிராயமும் கொண்டிருந்தும், என் மனச்சான்றுக்கு விரோதமாக அவர் அபிப்பிராயப்படி யான் ஒழுகுவேனுயின், என்னெழுக்கம் பொய்யொழுக்கமேயாம். ஜீவனேபாய நிமித்தம் வனுந்தரத்திற் சென்று பயிர்செய்து குடிசையில் வாழ்ந்து வந்த ஓர் ஏழைக்குடியானவன் மகனுகப் பிறந்து,

தமது மதிநுட்பத்தாலும் சீலத்தாலும் மனவுறுதியி னுலும் ஊக்கத்தாலும் அமெரிக்க ஐக்கிய மாகாணங் களின் தலைவராகி அக்கிராசனுதிபத்தியம் வகித்த கார்பீல்டு என்பவர் தம்மைப் பற்றிச் சொல்லியிருப் பதாவது:—

"தப்போ சரியோ, சாதகமோ, பாதகமோ என் மனக்கோளின்படி ஒழுகுவதே என் வாழ்க்கை முறை. பல்லாண்டுகளாக என்னைக் 'காங்கிரஸ்' மகா சபைக்குத் தங்கள் பிரதிநிதியாகத் தெரிந்தெடுத்து அனுப்பிவந்த ஜில்லா வாசிகள் என் செய்கைகளை மெச்சவேண்டுமென்று நான் மிகவும் விரும்பி னேன். ஆயினும், நான் கூறப்போவது ஒரு வேளை தற்புகழ்ச்சிபோலத் தோன்றலாம். அவர்களினும் அதிகமாக என்னை ஒரு மனிதன் மெச்சவேண்டு மென்று நான் மிகவும் அவாவுற்றேன்; அவன் பேர் கார்பீல்டுதான். அவன் ஒருவன்தான் தூங்கும் பொழுதும், உண்ணும் பொழுதும், ஜீவிய அவஸ் தைகளிலெல்லாம் நீங்காது என்னுடன் இருப் பவன்; அவன் என் செயல்களை ஒப்புக்கொண்டு மெச்சாவிடின் என் மனம் தீராத சஞ்சலத்தால் வருந்தும்."

" தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்தபின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்"

என்றார் தெய்வப் புலவரும்.

இவ்விடத்தில் ஒரு சங்கை உண்டாகலாம். நல் லோரைப்போலத் தீயோரும் தம்மன மொப்பிய படியே ஒழுகுவாராயின் பெருந்துன்பம் விளையுமே?

முதற்கண், உலகம் பழித்த தீச்செயல்களை உள்ள மொப்ப நன்றென்று கருதுவார் கடைப்பட்டமக்களி லும் அரியராவர். ஒரு பண்டத்தைத் திருடவரும் நாய்கூட மெதுவாய் ஓசையின்றிப் பதுங்கி வருத லால் தன் செயலின் இழிதன்மையைத் தான் உணர்ந் திருப்பதைக் காட்டி விடுமாயின், பகுத்தறிவும் விவேகமுமுள்ள மாந்தர் தீமையை நன்மையாகப் பெரும்பாலும் நினைக்கக்கூடும் என்றெண்ணுதல் பொருந்தாது. உலகத்தே நிகழும் மிக்க தீச்செயல் களுக்குக் காரணம் கேவலம் அறியாமையன்று. ஆயின், பேதைமையால் வரும் தீமைகளும் சிறு பான்மையுள. மனமொப்பியவண்ணம் நடக்கவேண் டுவதுபோலவே, அறிவை விருத்திசெய்து நமது மனக்கோள்களைச் சீர்திருத்தி, மனச்சான்றை வழி படு தெய்வத்துக்கு ஒப்பாக்குதலும் நமது கடன் என்பது மறக்கற்பாலதன்று.

சாதாரண மாந்தரது சுயநலச்சிந்தை அவா காமம் வெகுளி முதலிய தீக்குணங்களையும் அவற் றால் விளையும் கேடுகளையும் அனுபவத்தில் அறிந்து அவற்றினின்றும் ஜன சமூகங்களை விலக்குமாறு, நல்லார் பொல்லார் எல்லாரும் கீழ்ப்படிந்து கவ னிக்கவேண்டிய சில சட்ட திட்டங்களை முன்னோர் நியமித்திருக்கின்றனர். அவற்றை மீறிய ஒழுக்கம் அரசனால் ஒறுக்கப்படுகின்றது. அச் சட்டதிட்டங்க ளுள் அமையாது அவற்றின் புறமான ஒழுக்கமே ஈண்டுப் பேசப்படுவது. இவ்வொழுக்கத்தையேமனச் சான்று ஒப்பவேண்டும். இவ்வொழுக்கத்துக் குட்

படும் செயல்களை முக்கியமானவை யென்றும் முக்கியமில்லாதவை யென்றும் பிரிக்கலாம். சாதாரண நடை யுடை பாவனைகளை முக்கியமில்லாதவையெனக் கூறலாம். இவ்விஷயங்களில் பெரும்பாலும் ஊருடன் ஒத்து வாழ்வது நன்மதியாம். முக்கியமானவற்றை யும் சில உதாரணங்களால் விளக்குவோம்.

மனச்சான்ருேடு முரணிய ஒழுக்கம் தனக்கே னும் பிறர்க்கேனும் எவ்விதத் தீங்கையும் விளைக்கு மாயின், அதை முக்கியமானதென்று மதிக்கலாம். முற்கூறிய சோதிடனது நம்பிக்கையும்செயலும்தக்க உதாரணமாம். அவன் கிரகணகாலத்தில் குளித்துத் தருப்பணம் முதலிய இயற்றி உண்ணுதிருப்பதால் தனக்கேனும் பிறர்க்கேனும் வெளிப்படையான தீங் கொன்றும் இல்லையாயினும், அவன் செயல் பெரும் பாலும் பிறர்க்குப் பயந்தே செய்யப்பட்டதால் அவன்மனத்தூய்மையையும் உறுதியையும் சிதைத்து அவனுக்குக் குணக்கேட்டையும், அவனைப் பார்த் துத் தாமும் நம்பிப் பிறர் ஒழுகுவதால் அவ்விதப் போலிக்கொள்கை உலகத்தில் நிலைபெற்றுப் பிறர்க் குக் கேட்டையும், விளைவிக்கின்றது.

உலகத்திலே சாதாரண மாக்களான பெரும் பாலார் மேதாவிகளான சிறுபாலரைப் பின்பற்றி யொழுகுவதே இயல்பாதலின், அறிவிற் சிறந்தார் உலக அபிவிருத்திக்கு உத்தரவாதிக ளாகின்றனர். ஞானிகளும் அஞ்ஞானிகளும், பண்டிதரும் பாமர ரும், பேதமின்றி ஒரேவிதமாக ஒழுகின், ஞானமும் கல்வியும் பயன்பட்டுப் பெருகுவ தெங்ஙனம்? அறி

வுடையோரும் இங்ஙனம் மூடரைப்போல் ஒழுகுதற்குக் காரணம், பழைய வழக்கம் என்னும் பெரும் புலிக்கு அஞ்சாத மனவுறுதியும் தீரமும் இன்மையே. போர்க்களத்திலே புறங் கொடாது மாற்றலரைப் புடைத்து மடியும் போர்வீரன் தானே வீரன்? உலக மதிப்பையும் இகழ்வையும் பாராட்டாது தன் மனச்சான்று மகிழ்ந்தொப்ப மெய்ந்நெறிக்கண்ணே ஒழுகும் உத்தம புருஷன் அவனினும் பதின்மடங்கு சிறந்த வீரனாவான்.

எங்ஙனமெனின், முன்னவன் உலகமதிப்பையே அவாவி அதன் வசையுரையை அஞ்சி மடிகின்றான். பின்னவனோ, ஆன்ற பேருலகின் புகழ்ச்சியையும் இகழ்ச்சியையும் ஒருங்கே திரணமென நினைந்து கண் கண்ட கடவுள்போன்ற தன் மனச்சாட்சியின் மெச்சுதலையே விரும்பி ஒழுகுகின்றான். மதாசார விஷயங்களிலும், விரதாநுஷ்டான விஷயங்களிலும், உபநயனம் விவாகம் முதலிய பல்வேறு சம்ஸ்காரங்களைப் பற்றிய வழக்கங்களிலும், தினசரி ஒழுக்கத்திலும், நம்மவரில் அறிவாளர் எவ்வளவு தம்மனமொப்பாத வண்ணம் உலக வழக்கத்துக்குப் பயந்து நடக்கிறார்களென்பதை உற்று நோக்குவோமாயின், மேனாட்டார் நம்பாற் சுமத்தும் பழிப்புரையின் உண்மை விளங்குவதுமன்றி, நமது நாடு இங்ஙனம் சீர் கெட்டிருப்பதின் முக்கிய காரணமும் தெற்றென விளங்கிவிடும்.

அ. மாதவையா,
பத்மாவதி முதலிய நூல்களின் ஆசிரியர்

## 18. ஔவையார் பொற்கிழி பெற்றது

ஒரு காலத்தில் பொருட் செல்வத்தோடு செவிச் செல்வமும் படைத்த பிரபு சிகாமணி ஒருவன் இருந்தான். அவனுள்ளம் எப்பொழுதும் அழகுக் கலைகளையும் அறிவுக் கலைகளையும் தழுவி வளர்ந்தது. பண்டைத் தமிழகத்தில் தமிழரது பெரு வாழ்விலே பூத்துச் செழித்த இலக்கிய நறுமலர்கள், அவனது வாழ்க்கையினை நீங்காது சூழ்ந்து பரிமளித்துக் கொண்டிருந்தன. அவனது வள்ளன்மை உத்தமக் கவிஞர்க்கும் கலைஞர்க்கும் ஓர் ஊன்றுகோலாக உதவியது.

சில ஆண்டுகளாக, அப்பிரபு புதியதொரு நல்ல பாட்டைக் கேட்டு இன்புறவேண்டுமென்று ஆசை கொண்டிருந்தான். ஆனல் பாட்டு, பெரும்பொருளாலும் ஆக்கப்படுவதன்று என்பதை அவன் நன்கறிவான். நற்கவிதைக்கு அலந்துபோன அவனுள்ளத்தில் ஒரு புதிய ஆலோசனை பிறந்தது. அதற்கிணங்க, அவன் தன் ஆஸ்தான மண்டபத்தில் ஒரு பொற்கிழி தூக்கி, அதனைத் தன் உள்ளத்திற்கு இன்னமுதமாகும்ஓர் அருங்கவிபாடும் புலவருக்கு வழங்குவதாக நாடெங்கும் அறிவித்தான்.

பிரபு இரஸிகனுக இருந்ததால் அப்பொற்கிழியை அழகுபெற அமைந்துள்ள இலட்சுமி சிலையொன்றின் கரத்திலே திகழ்வித்தான். இலட்சுமி தேவி உயிரோவியமாகச் சித்திரிக்கப்பெற்றிருந்தாள். பொய்கையில் புதிதாக மலர்ந்ததொரு செந்தாமரை மலரில் செம்மாந்து வீற்றிருப்பதாக அத்

தேவி அமைக்கப்பெற்றிருந்தாள். சிறிது தூரத்தே யிருந்து நோக்குவோர், மண்டபத்தின் ஒரு பகுதியில் பொய்கை குளிர்ந்த நீரோடு அலையெறிந்து கொண்டிருப்பதாகவும், அந்நீர்ப் பரப்பிலே ஓர் இனிய செந்தாமரை தளையவிழ்ந்து மலர்ந்திருப்பு தாகவும், அம்மலரின்மீது அழகுத் தெய்வத்தின் ஆனந்த ரூபம் அரசிருந்து பொற்கிழியும் கையுமாக எதிர் நோக்கி நகை புரிவதாகவும் கருதி மயங்கு வாராயினர்.

பொன்னரசியின் கரத்தினின்றும் பொற்கிழியைப் பெறவேண்டும் என்ற பேரவா பிடர் பிடித்துந்த, எண்ணிலாத புலவர்கள் பிரபுவின் சபா மண்டபத்திற்கு வந்து சேர்ந்தனர். அவன் அவர்களை உபசரித்து, அவர்கள் பாடும் பாடல்களை ஆவலோடு கேட்பான். ஆனால் அப்பாடல்களில் ஒன்றும் அவனுள்ளத்திற்கு ஆறுதல் அளிக்கவில்லை. எல்லாம் வெறும் சொல்லடுக்குகள்! மோனைகள்! பிராசங்கள்! இச் சொற் குப்பைகளிலே உண்மை மணி ஒன்றேனும் காணப் பெறவில்லையே யென்று பிரபு பெருமூச்செறிவது வழக்கம். எனவே வந்த புலவர்களெல்லாம் விதியை நொந்துகொண்டு வீடு செல்வாராயினர்.

இங்ஙனம் இருக்கையில், ஒரு நாள் ஆண்டிலும் அறிவிலும் ஒருங்கே பழுத்த பெருங்கிழவியான ஔவைப் பிராட்டி, அச்சபைக்கண் திடீரென்று தோன்றினள். "இக்கிழவி எவ்வாறு பொற்கிழி பெறுதல் கூடும்?" என்று சபையிலிருந்தவரில் பலரும்இரங்






கித் தம்முள் உரையாடலுற்ருர். ஆனல் பிரபுவோ உருவினைக் கண்டு இகழாது, அந்நரை மூதாட்டியை

விரைந்தேற்று உபசரித்து, "வந்த காரியம் என்ன?" என்று அன்போடு வினவினன்.

அப்பொழுது ஔவை, பிரபுவின் அகக் கருத்தினை நன்குணர்ந்து கொண்டு, பொன்னரசியையும் பொற்கிழியையும் நோக்கி ஒருவெண்பாவை உருக்கமான குரலிற் பாடினள். அது வருமாறு:—

"ஆர்த்தசபை நூற்றொருவர் ஆயிரத்தொன் றாம்புலவர்
வார்த்தை பதினா யிரத்தொருவர்—பூத்தமலர்த்
தண்டா மரைத்திருவே தாதாகோ டிக்கொருவர்
உண்டாயின் உண்டென் றறு."

ஔவையெனும் அருட்கொடியில் பூத்த இக்கவி மலரின் அழகும் ஒளியும் மணமும் பிரபுவின் உள்ளத்தையும் அங்குக் குழுமியிருந்த புலவர்களின் உள்ளத்தையும் ஒருங்கே வசீகரித்தன. பிரபு மனமுவந்து பொற்கிழியை ஔவையாருக்கே அளித்தான்.

பிள்ளைகளே! இக்கவி மலரின் மாட்சி உங்களுக்கு இனிது புலனாகின்றதா? நூற்றில் ஒருவரே அறிஞர் பேசும் சபைகளில் செல்லுதற் குரியவர். அவ்வாறு செல்பவருள், புலமைப் பெருக்கோடு விஷயங்களை உய்த்துணர்வோர் ஆயிரத்தி லொருவரே. அப்புலவருள்ளும் பதினாயிரத்தி லொருவரே வார்த்தையின் நயம் தெரிந்த கவிப்புலவர்!

இவ்வண்ணம் சில அரிய உண்மைகளை வெளியிட்டு வரும் ஔவை, பிரபுவை விளித்துப் பேசாது, 'பூத்தமலர்த்தண்டா மரைத்திருவே' என்று இலட்

சுமி தேவியை விளித்துப்பேசத் தொடங்கி, முடிவாகத் தான் கண்டுகொண்ட உண்மையினை வெளியிடப் புகுந்து, 'தாதாகோ டிக்கொருவர்' என்று இரஸிக மணியான பிரபுவின் பெருவள்ளன்மையினைச் சிறப்பித்துப் பேசுகிருள். இவ்வாறு தான் வெளியிட்ட உண்மைக்குப் பொன்னரசியாகிய இலட்சுமியையே சாட்சியாக்கி, 'உண்டாயின் உண்டென்றறு' என்று பொற்கிழியை நோக்கிக் குழந்தை யுள்ளத்தோடு கூறி முடிக்கிருள்; இப்பாட்டு ஔவையாரின் அழகியமனே தர்மத்தை அப்படியே இன்னேசை பெற்று வரும் செஞ்சொற்களால் சித்திரித்துக் காட்டுகிறதல்லவா?

---

## 19. நட்சத்திர உலகம்

பிள்ளைகளே! மப்பு மந்தாரமற்ற இரவில் ஆகாயத்தை உற்று நோக்கி யிருக்கிறீர்களா? அதிலும் நிலவில்லாத இரவாயிருந்தால் ஆகாயத்தின் காட்சி அற்புதமாகவேயிருக்கிறது! நீலவானத்திலேவெள்ளி முளைகளை அள்ளித் தெளித்தாற்போல, மங்கலாயும் பிரகாசமாயும் உள்ள பல நட்சத்திரங்கள் ஒளி வீசுகின்றன. சில இடங்களில் தனித்தனியாகவும், சில இடங்களில் கொத்துக் கொத்தாகவும், வானத்தின் உச்சியிலும் பலவேறு இடங்களிலும் நட்சத்திர கணங்கள் ஜொலித்துக் காந்தியை உதிர்க்கின்றன. இவற்றைப் பற்றி நீங்கள் அறிய ஆவல் கொள்வீர்கள். இவைகள் எல்லாம் புள்ளிகள் போலக் காணப்பட்டாலும் உண்மையில் ஒவ்வொன்றும் ஒரு சூரிய

ைகவே யிருக்கிறது. அவை வெகு தூரத்தில் இருப்ப தால் சூரியன் அளவுக்குக் காணமுடியவில்லை.

இனி நட்சத்திரங்களின் தூரத்தைச் சிறிது ஆராய்வோம். இவற்றின் தூரத்தை அளவிடுதற்கு நமது அளவுகோல் போதாது. வேறு சங்கிலி தயார் செய்யவேண்டும். ஒளி செகண்டு ஒன்றுக்கு 186000 மைல் வீதம் பாய்ந்து செல்லுகிறது என்று கணக் கிட்டிருக்கிறார்கள். சந்திரனிடமிருந்து நமக்கு ஒளி வர $1^1$ செகண்டு ஆகிறது. சூரியனிடமிருந்து இவ் வொளி நமக்கு 8 நிமிஷத்தில் கிடைக்கிறது. நமக்கு அதிகச் சமீபத்திலுள்ள நட்சத்திரத்திலிருந்து இவ் வொளி நமக்கு வர $3\frac{1}{2}$ வருஷமாகிறது. தூர திருஷ்டிக்கண்ணாடிக்குப் புலனாகக் கூடிய வெகு தொலையிலுள்ள நட்சத்திரத்திலிருந்து **இவ்வொளித் தூதன்** நம்மை நோக்கிப் பிரயாணப்பட்டு வர 14 கோடி வருஷமாகிறது. இப்படி வெகு வெகு தூரத்தில் இருப்பதால் தான் நட்சத்திரங்களின் உண்மையான அளவு நமக்குப் புலப்படவில்லை.

இவை இயற்கை ஒளியாலே பிரகாசிக்கின்றன. நம்முடைய சூரிய வெளிச்சம் இவ்வளவு தொலைக்கு எட்டி இவைகளைத் தோற்றுவிக்கும் என்று எண்ண இடமில்லை. மேலும் **ஒளி ஆராய்ச்சிக் கருவி** என்று ஒரு யந்திரம் வான சாஸ்திரிகள் ஏற்படுத்தியிருக் கிறார்கள். இதன் மூலமாய்ச் சோதனை செய்து நட்சத் திர காந்தியைச் சுயம்புவான ஒளியென்று தீர்மானித் திருக்கிறார்கள். உண்மையில் ஒவ்வொரு நட்சத்திர மும் அதிக உஷ்ணமாய்ப் பற்றி யெரிந்துகொண் டிருக்கும் சூரிய மண்டலமாகும்.

நட்சத்திரங்களெல்லாம் புள்ளிகள்போல ஒரே வடிவமாகத் தோற்றினும் அவற்றின் பருமனிலும் ஒளியிலும் பெரிதும் வேறுபாடுண்டு. இவற்றில் மிகச் சிறிய நட்சத்திரம் பூமி அவ்வளவு பருமனுள் ளது. சூரியனுக்குள் இம்மாதிரி 10 லட்சம் நட்சத் திரங்களை அடைத்து வைத்தாலும் இடம் காலி யிருக்கும். மிகப் பெரிய நட்சத்திரமாகிற திரு வாதிரையில் நமது சூரியனைப்போல $2\frac{1}{2}$ கோடி சூரியர்களை அடைத்து வைக்கலாம். நமது சூரிய னுக்குப் பதிலாக அச்சிறிய நட்சத்திரத்தை வைத் தால் அது வியாழன் சனி இவற்றைவிடச் சிறிதாகத் தோன்றும். திருவாதிரையை வைத்தாலோ நாமும் அதற்குள்ளாய் விடுவோம்! அதன் அரைவிட்டம் பூமி வீதியின் விட்டத்தைவிடப் பெரியது. நட்சத் திரங்களிலெல்லாம் மிகவும் ஒளி குறைந்தது சூரிய வெளிச்சத்தில் 50,000 த்தில் ஒரு பங்கு ஒளி தருகி றது. இது நமது சூரியனுக்குப் பதிலாக மாற்றப் பட்டால் நமது கடல்களெல்லாம் உறைந்து வாயுவும் திரவமாகி விடும், நாமும் விறைத்துச் செத்துப்போ வோம்! அதிக ஒளியுள்ள டொராடஸ் என்னும் நட் சத்திரத்தை மாற்றி வைத்தால் மின்சார விளக்கின் மிகுந்த கொதிப்புள்ள பாகத்திலும் இருபங்கு கொ திப்பு ஏற்பட்டு, இந்தப் பூமியும், மாடமாளிகை கூட கோபுரங்களும், நாமும் உருகி ஆவியாகப் புகைந்து போக வேண்டியதுதான்!

ஆனல் நட்சத்திரங்களின் கனத்தில் அதிக வேற்றுமை இல்லை. சூரியனில் 10-ல் ஒரு பங்கி

விருந்து 10 மடங்கு வரை நட்சத்திரங்களின் கனம் வேறு படுகிறது. இதனால் நட்சத்திரங்களின் அமைப்புப் புலனாகிறது. நட்சத்திரங்கள் வெவ்வேறு பருமனோடிருப்பதற்குக் காரணம் அவற்றில் பல அளவுள்ள ஜடப்பொருள்கள் அடங்கியிருப்பதன்று. ஆனால் அந்த ஜடப்பொருள் நெருக்கமாகவோ கலப்பாகவோ அமைந்திருக்கும் முறையைப் பொறுத்தது. ஒரு 'டன்' நிறையுள்ள ஜடவஸ்து சூரியனில் அடைக்கும் இடத்தைவிடத் **திருவாதிரையில்** 1000 மடங்கு இடத்தை அடைக்கிறது. அது **"வான் மானன்"** என்னும் நட்சத்திரத்தில் 1000-த்தில் ஒரு பங்கு இடத்தைத்தான் அடைக்கிறது. இவ்வாறு நட்சத்திரங்கள் அழுத்தத்தில் பெரிதும் வேறுபடு கின்றன.

இனி நட்சத்திரங்களின் உட்புறத்தைக் கவனிப் போம். சூரியனின் உட்புறம் 5 கோடி டிகிரி உஷ் ணத்திலிருக்கிறது. இவ்வுஷ்ணத்தைச் சுண்டைக்காய் அளவு பருமனுள்ள ஒரு பொருளில் ஏற்றினால் அதற்கு 1000 மைல் தூரத்தில் நெருங்குகிற மனித னைப் பொசுக்கிச் சாம்பலாக்கி விடும் என்று படித்தி ருக்கிறீர்கள்! இதுவே நட்சத்திரங்களின் உட்புறத் திற்கும் உள்ள சராசரி உஷ்ணமாகும். இவ்வளவு உஷ்ணத்தில் நட்சத்திரங்களின் உட்புறத்தில் மூலப் பொருள்கள் எல்லாம் பரமாணுக்களாகப் பிரிந்து தான் இயங்கும்.

இவ்வித நட்சத்திரங்கள் இரட்டையாயும் மூன்று நான்கு சேர்ந்தும் ஆகர்ஷண சக்தியால் கட்டுண்டு

சுற்றிச் சுழல்கின்றன. இவற்றில் ஒவ்வொன்று ஒவ்வொரு நிறமாயிருக்கும். எல்லாம் ஒரே நிறமாய் இருப்பதும் உண்டு. ஆயிரக்கணக்கான நட்சத்திரங்களின் கூட்டங்களும் காணப்படுகின்றன. இவற்றை **நட்சத்திரக்கொத்து** என்போம். இது வெறுங் கண்ணுக்குப் புகைபோலத் தோன்றி, தூரதிருஷ்டிக் கண்ணுடி கொண்டு பார்த்தால் கணக்கில்லாத பல நட்சத்திரங்களாகப் பிரிந்து காணும். இவற்றில் பல சூரியர்கள் சேர்ந்து சுழன்றுகொண்டிருக்கின்றன.

இவற்றைத் தவிரப் புகைபோன்ற சேர்க்கைகள் பல வானத்தில் காணப்படுகின்றன. எவ்வளவு கூர்மையான தூரதிருஷ்டிக் கண்ணுடிகொண்டு பார்த்தாலும் இவை நட்சத்திரங்களாகப் பிரிந்து காட்டுவதில்லை. இவற்றைத் **தூமபடலம்** அல்லது **நட்சத்திரக் கரு** என்போம். அதிகக் கொதிப்புள்ள பொருள்களெல்லாம் ஆவிநிலையில் ஒன்ருகச் சேர்ந்து குவிந்திருப்பதால் இவ்விதத் தோற்றம் ஏற்படுகிறது. இப்படலங்கள் வரவரச் சூடாறிப் பருமனிலும் குறைந்து திரவமாக இறுகிக் கடைசியாகக் கட்டியாய் அழுத்தம் பெற்றுச் சூரியர்களாகத் தோன்றுகின்றன என்று வானசாஸ்திரிகள் சொல்லுகிருர்கள். நமது சூரியனும் கிரகங்களும் பல யுகங்களுக்கு முன் தூமபடலமாக விருந்து படிப்படியாக ஆறி இந்த நிலைமைக்கு வந்திருக்கவேண்டும்! இப்படலங்களில் ஒவ்வொன்றும் பெருத்த விஸ்தீரணமுடையது. ஒவ்வொன்ருலும் 100 கோடி சூரியர்கள் செய்யக்கூடும். ஒரு தூமபடலத்தின் அளவுக்கும் பூமியின்

அளவுக்கும் உள்ள தாரதம்மியத்தை ஓர் உதாரணத்தால் விளக்குவோம். ஆசியாக்கண்டம் முழுவதையும் அடைக்கும் படமாக ஒரு தூமபடலத்தைக் காட்டினல் அதில் அதிசூட்சுமமான பூதக்கண்ணுடிக்கு மட்டும் புலனுகக்கூடிய சிறுபுள்ளியாகத்தான் நமது பூமியைக் காட்ட முடியும். ஆகாயத்தின் குறுக்காகத் தோன்றும் **பால்வீதி மண்டலம்** நட்சத்திரங்கள் தூம படலம் இவற்றின் சேர்க்கையால் ஆனது.

இன்னும் சில வஸ்துக்கள் வானத்தில் அலைகின்றன. வெகுதூரம் அலைந்து திரிவன வாதலால் சூரிய பேட்டிக்கு வரும்போதுதான் இவற்றை நாம் பார்க்க முடியும். சில திடீரென்று சூரிய ராஜ்யத்தில் புகுந்து சிறிதுகாலம் இருந்துபோகும்; திரும்பி வருவதில்லை. இவற்றுக்குத் **தூமகேது** அல்லது **வால் நட்சத்திரம்** என்று பெயர். 1910-ம் வருஷத்தில் **ஹாலி தூமகேது** என்ற வால் நட்சத்திரம் தோன்றி வானத்தில் விநோதமாய்ப் பிரகாசித்து வந்ததாகக் கேட்டிருப்பீர்கள்! இவற்றின் உடலில், மூன்று பாகங்கள் உண்டு. அவையாவன :— வெளுத்து அடர்ந்து விளங்கும் அங்குரம், அதைச் சுற்றி இலேசான போர்வை, வால் என்பன. சிலவற்றின் வால் பல கூருய்ப் பிளந்து விசிறிபோலும் மயில் தோகைபோலும் அழகாக விருக்கும். தூமகேது தூரத்திலிருக்கும்போது கனத்த குண்டுகளால் ஆனதாய்த் திரண்டு உருண்டை வடிவமாயிருக்கும். சூரிய வெப்பத்தால் வெளிப்பாகம் கொதித்து ஆவி ரூபமாக மாறிப் பிரிந்து சூரிய மின்சார

சக்தி வேகத்தால் துரத்தப்படுகிறது. அப்படித் துரத்தப்பட்டு ஓடும்போது வால்ரூபமாய்த் தோன்று கிறது. இதனால்தான் வால் சூரியனுக்கு எதிர்ப் புறமாகத் திரும்பி நிற்கும். ஒரு தூமகேது சூரியனை நோக்கி வருகையில் அதன் மார்க்கத்தில் கிரகம் ஒன்று நெருங்கி விட்டால் அதன் வீதி ரூபம் மாறும். அதுமுதல் சூரியனால் கட்டுப்பட்டு அதைச் சுற்றிக்கொண்டே இருக்கும். ஆகவே தற்செய லாய்ப் பார்க்க வருவனகூட, கிரகங்களின் பாசத் தால் கட்டுண்டு அவற்றைவிட்டு அகல மனம் வராமல் சூரிய குடும்பத்திலே தங்கிவிடும். இவ்வித மாகக் குருமுதல் நெப்தியூன் வரையுள்ள நான்குகன மான கிரகங்கள் வெகு தூமகேதுக்களைச் சூரிய ராஜ் யத்தில் கட்டுப்படுத்தி யிருக்கின்றன. தூமகேதுக் களின் கனம் குறைவாயும், கிரகங்களின் கனம் கோடிக்கணக்கான மடங்கு அதிகமாயு மிருப்பதால் இது வான சாஸ்திர ஆராய்ச்சிக்குப் பெரிதும் உப காரப்படுகிறது. தூமகேதுவின் வேகத்தையும், வழி யிலிருக்கும் கிரகத்தின் தூரத்தையும் தூமகேதுவின் வீதிமாறும் அளவையும் கொண்டு, கிரகங்களின் கனத்தைக் கண்டு பிடிக்கலாம். புதனுடைய கனத் தை இவ்விதமாய்த்தான் கண்டுபிடித்திருக்கிறார்கள்.

கிரகங்களையும் தூமகேதுக்களையும் போல வான வெளிகளில் **சிறு குண்டுகளும்** ஓடி அலைகின்றன. இவை ஒளி கொடுக்கும் சக்தியற்றன. ஆகையால் இவற்றைக் கண்டுபிடிக்க முடியாது. இவை செகண்டு ஒன்றுக்கு 26 மைல் வீதம் ஓடிக்கொண்டிருக்கின்

றன. இவை பூமியைச் சூழ்ந்த வாயுமண்டலத்தினுள் பிரவேசித்தால் வாயுவுடன் உராய்ந்து திடீரென்று ஒளிகொடுக்கும் திறம் பெற்று, நட்சத்திரங்கள்போல விளங்கி எரிந்துகொண்டு மறையும். இவைகளுக்கு 'உல்கம்' அல்லது **விண்வீழ் கொள்ளி** என்று பெயர். இப்படி நட்சத்திரங்கள் போல உருகிப் பாய்வதை இரவில் நீங்கள் சில சமயங்களில் பார்த்திருக்கலாம். இவற்றில் எரியும் பாகங்கள் தவிர எரியாத பாகம் சில வேளைகளில் கற்களாய் விழும். இவற்றை வானக் கற்கள் என்கிறோம். இவை அதிக வேகத்துடன் விழுந்து மிகுந்த சேதத்தை உண்டு பண்ணல் பூமியைச் சுற்றிப் போர்வைபோலச் சூழ்ந்திருக்கும் வாயு மண்டலந்தான் நம்மைக் காப்பாற்றுகிறது.

மேற்கூறியவற்றிலிருந்து நட்சத்திரங்கள் எல்லாம் பெரிய பெரிய உலகங்களென்றும், அவை வெகு தூரத்தில் இருப்பதனல்தான் மிக மிகச் சிறியவைகளாய்க் காணப்படுகின்றன என்றும், இப்படிக் கோடிக்கணக்கான நட்சத்திரங்கள் வானவெளியில் திரிகின்றன என்றும், இவை பரஸ்பர ஆகர்ஷண சக்தியால் கட்டுண்டு சுற்றிச் சுழல்கின்றன என்றும் அறிந்துகொண்டீர்கள்! இன்னும் கோடிக்கணக்கான நட்சத்திரங்களை உற்பத்தி செய்யக்கூடிய மிகப் பெரிய தூமபடலங்களும் வானத்தில் அதிகவேகமாய் அலைந்து திரியும் வால் நட்சத்திரங்களும் உருகி விழுந்து நட்சத்திரம்போல ஜொலிக்கும் விண் வீழ் கொள்ளிகளும், வானக்கற்களும் ஆகாய வெளியில் நிறைந்திருக்கின்றன என்றும் படித்தீர்கள்! இவற்

றையெல்லாம் கவனிக்கும்பொழுது, வானத்தில் விளையும் ஆபத்துக்களுக்கெல்லாம் தப்பிப்பிழைத்து வானராஜ்யத்தின் ஒரு மூலையிலே மிகச் சிறிய இடத்தை அடைக்கும் நமது சூரிய ராஜ்யம் எவ்வளவு? அதிலும் சிறிய அணுவாய் விளங்கும் நமது பூமி எவ்வளவு? பூமியில் வாழும் மனிதர்களுடைய இன்பதுன்பங்களும், ஆசைகளும், வீண் கனவுகளும், இப்பெரும் பிரம்மாண்டத்தின் எல்லையற்ற பெரும் பரப்பிலே, அணுவிலும் அணுவாய், மிக மிகச் சிறியனவாய், எவ்வளவு அற்பமாகத் தோன்றுகின்றன!

---

## 20. விவேகாநந்தர்—வாழ்க்கையும் உபதேசமும்

"நான் சொல்லுகிறபடி செய்; செய்கிறபடி செய்யாதே" என்று உபதேசஞ் செய்வோர் பெரியோரல்லர். பிறருக்கு முள் நிறைந்த பாதையைக் காட்டிவிட்டு, ரோஜா இதழ் பரப்பிய பாதையில் தாம் மாத்திரம் மோட்சலோகம் செல்லலாமென்று கருதுவோர் இவரே. உண்மையான பெரியோர் விஷயத்தில், வாழ்க்கையும் உபதேசமும் ஒன்றுபட்டிசைந்துள்ளன. இத்தகைய பெரியோருள் விவேகானந்தரும் ஒருவராவர்.

விவேகாநந்தரது வாழ்க்கை தியாக வடிவாக விளங்கியது. இளமையிலேயே இவர் உலக வாழ்க்கைக் குரிய சிற்றின்பங்களை யெல்லாம் துறந்துவிட்டார். நமது தாய் நாடெங்கும் சுற்றுப் பிரயாணம் செய்த பின், இமயமலைப் பிரதேசங்களிலும் இமய மலைக்கு அப்பாலுள்ள பிரதேசங்களிலும் சஞ்சா

ரம் செய்தார். இத்தகைய பிரயாணங்களில் இவர் அனுபவித்த இன்னல்களுக்கு ஓர் அளவில்லை. பல வகையான கஷ்டங்களால் இவர் வாழ்க்கை உருவாக்கப்பெற்றது. பல வகையான இடையூறுகளையும் வாழ்க்கைப்போரில் வென்று முதுகுகண்ட விவேகானந்தர்பால், அபார மனவலிமையும் சங்கற்ப சக்தியும் சிறந்து பொலிந்தன.

விவேகானந்தர் வங்க நாட்டினரெனினும், இவரது பெருமையினை முதல் முதல் கண்டு பிடித்தது தமிழ்நாடேயாகும். அமெரிக்காவிலுள்ள சிகாகோ நகரில் கூடிய சர்வமத சபையில் இந்து சமயத்தைப் பிரசங்கிக்குமாறு விவேகானந்தரை அனுப்பியவர் சென்னைவாசிகளே யாவர். அமெரிக்காவிலும் விவேகானந்தர் பல பல கஷ்டங்களை அனுபவித்தார். எனினும், இவரது மனவலிமையும் ஆன்ம சக்தியும் இவருக்கு எடுத்த காரியம் யாவினும் வெற்றியளித்தன.

விவேகானந்தர் தாய் நாட்டினின்றும் புறப்பட்டுக் கடல் தாண்டி ஜப்பான் வழியாகச் சென்று 1893-ம் ஆண்டில் சிகாகோவில் இறங்கினர். அப்போதுதான், இந்தியாவை விட்டு வெளியே செல்லாத இந்தியர் நிலை கிணற்றுத் தவளைகளின் நிலையினை ஒத்திருக்கிறதென்று இவர் கண்டுபிடித்தார். உலகிலுள்ள பலவேறு சமயவாதியர் நிலையும் இத்தகையதே என்பதும் இவர் கருத்தாகும். அமெரிக்க சர்வ தேச மகா சபையின் கூட்டமொன்றில், விவேகானந்தர் கிணற்றுத் தவளையின் கதையினையே மத

பேதங்களின் காரணங்களை விளக்க உபயோகித்தார். விவேகானந்தரது இந்து சமயம் சர்வ சமய சாரமேயாகும். மதவிஷயங்களிலும் மற்றும் பலவிஷ



யங்களிலும் இவர் விரிந்த நோக்கமுள்ளவராக விருந்தார். இதற்குக் காரணம் இந்தியாவிலும் வெளிநாடுகளிலும் பிரயாணஞ் செய்து பல சமய நூல்களையும் பதார்த்த விஞ்ஞான நூல்களையும் ஒப்பிட்டு

ஆராய்ந்து இவர் விரிந்த அறிவும் உயர்ந்த நோக்கும் பெற்றிருந்ததே யாகும்.

விவேகானந்தர் அமெரிக்காவில் விதைத்த அபிப்பிராயங்கள் அந்நாளில் ஒருவாறு பயனளித்த போதிலும், அவ்விதைகள் ஆழ்ந்து பதியவில்லையென்பது திண்ணம். சாமானிய அமெரிக்க மக்கள் அவரது தோற்றத்தாலும் ஜீவ வாக்கினுலும் வசீகரிக்கப்பட்டபோதிலும், நாளடைவில் அவரையும் அவர்தம் அறவுரைகளையும் மறந்துவிட்டனர். அமெரிக்க பண்டிதர்களோ, அவரது உபதேசம் ஆராய்ச்சி முறையில் அமைந்திராததால், அதனை அதிகமாக மதித்துப் போற்றினரில்லை. இங்ஙனம் அமெரிக்காவிற்கு விவேகானந்தரது உபதேசத்தால் விசேஷ நற்பயன் விளையவில்லை எனினும், வெளிநாடுகளில் அவருக்கேற்பட்ட புகழால், இந்தியா நன்மை அடைந்ததென்பதில் ஐயமில்லை.

விவேகானந்தர் இங்கிலாந்திற்குச் சென்று மாக்ஸ் முல்லரையும், ஜர்மனிக்குச் சென்று டாய்சன் பண்டிதரையும் சந்தித்தார். ஸ்விட்ஸர்லாந்திலுள்ள சூரிக் நகரத்தில் நடைபெற்ற தர்ம மகா சபைக்கும் விஜயம்செய்து தாய் நாட்டிற்கு மீண்டார்; கொழும்பிலே வந்திறங்கி, இலங்கை வாசிகளின் வந்தனோபசாரத்தைப் பெற்றுக்கொண்டு, கொழும்பு நகரத்துச் சபா மண்டபத்தில் ஒரு சொற்பொழிவு நிகழ்த்தினர். இலங்கையிலிருந்து இந்தியாவிற்குப் புறப்பட்டு, இராமநாதபுரம் வந்து சேர்ந்தார்.

இராமேசுவர ஆலயத்தில் 'சமய ஒழுக்கம்' என்பது பற்றி ஒரு சொற்பொழிவு செய்தார். இவர் மேலை நாடுகளின் அங்கீகார முத்திரை பெற்று மீண்டு தாய் நாட்டிலே முதன்முதல் 1897-ம் ஆண்டு ஜனவரி மாதம் அடிவைத்த இடத்தைக் குறிக்கும் ஞாபக ஸ்தம்பம் ஸ்ரீ பாஸ்கர சேதுபதியால் நாட்டப் பெற்றது. அப்போது விவேகானந்தர் பேசுகையில், "நமது தாய்நாட்டின் பொருட்டும் மதத்தின் பொருட்டும் அடியேன் செய்த காரியத்தில் ஏதேனும் ஒரு சிறிது நன்மை யிருக்குமாயின், அதற்காக யாவரும் இராமநாதபுரம் சேதுமன்னருக்கே கடன் பட்டவராவர்" என்று கூறினர். இது கேவலம் பணிவுரையன்று; உண்மையும் இதுவே. விவேகானந்தரை ஈன்ற பெருமை வங்கநாட்டிற்கு உரியது; அவரைக் கண்டுபிடித்த பெருமை தமிழ் நாட்டிற்கே உரியது. மேலை நாடுகளில் புகழ்சூடி மீண்ட பிறகும் வங்கநாட்டைப் பார்க்கிலும் சென்னை மாகாணமே விவேகானந்தரது வாக்குவன்மையில் ஈடுபட்டு, அவரது உபதேசங்களை அமுதமாகப் பருகிய தென்னலாம்.

விவேகானந்தர் மறுபடியும் சீமைக்கும் அமெரிக்காவிற்கும் சென்று, **சான்பிரான்ஸிஸ்கோவில்** வேதாந்தசங்கம் ஒன்று நிறுவினர். ஆனல் இதற்கு முன்னரே, 'இராம கிருஷ்ணமிஷன்' என்ற சங்கம் இந்தியாவில் நிலையிடப்பெற்றது. இச் சங்கத்தார் ஆற்றிவரும் பஞ்சநிவர்த்தி முதலிய சமூக சேவைகளை அனைவரும் அறிவர்.

சுவாமி விவேகானந்தர், 1902-ம் வருஷம் தமது முப்பத்தொன்பதாவது வயதில் காலஞ்சென்றார். இவர் ஓர் உண்மையான கர்மயோகியாக விருந்தார். இவர் வாழ்க்கை தியாகத்தால் இழைக்கப்பெற்ற தோர் அருங்கலமாக விளங்கியது. இவர் ஓர் வீர புருஷர்—இயற்கையரசர்—மக்கள் உள்ளத்தை முடிசூடாது ஆண்ட மன்னருள் ஒருவர். இவரது உபதேசமும், வாழ்க்கையைப்போல், தியாகத்தினையே தழுவிப் படர்ந்தது.

இந்து மக்களின் பிராணாதாரம் மதமே என்பது அவர் கொள்கையாதலால் இந்து சமயத்தைத் தழுவி, நாட்டுக்காதலும் தியாக உணர்வும் உயர்ந்த லட்சியங்களும் நமது பண்டித—பாமர மக்களுள் நன்கு பரவுதல் வேண்டுமென்று அவர் விரும்பினர்.

"சமயமென்பது வெளிச்சடங்கன்று. தூய்மையற்ற உள்ளத்தோடு பிறருக்குத் தத்துவோபதேசம் புரிய வருவோரின் கதி துர்க்கதியே. அந்தர்முக உபாசனையும் அகத்தூய்மையுமே உண்மையானவை இவையின்றி, இவற்றின் அடையாளமாகிய வெளிப். பூசனைகளால் மாத்திரம் பயன் ஒன்றுமில்லை. தீர்த்தமாவது பரிசுத்தப் பொருள்களும் புண்ணிய புருஷர்களும் நிறைந்துள்ள ஸ்தலம். அயோக்கியர் மலிந்த இடத்தில் ஆயிரங்கோவில்கள் இருந்தாலும், தீர்த்த மகிமை போய்விடும். உபாசனையின் சாராம்சம் சித்த சுத்தியும் பரோபகாரமுமே யாகும். வறியோரிடத்தும், மெலிந்தோரிடத்தும், நோய்வாய்ப்பட்டோரிடத்தும், எவன் சிவபெருமானைத் தரிசிக்கின்றானே,

அவனே உண்மையான சிவபக்தன்'' என்று இராமேசுவர ஆலயத்தில் தாம் செய்த பேருரையில் அவர் கூறியுள்ளார். இதுதான் விவேகானந்தரது இந்து சமயம், இந்து தர்மம். "ஜாதிமதகுல பேதமின்றி ஏழைமக்கள் பால் சிவஸ்வரூபம் கண்டு, பாடுபட்டுப் பணியாற்றுவோரிடத்தில், சிவபெருமானுக்கு உண்டாகும் அன்பைப்போல் திருக்கோயில்களில் மாத்திரம் அவரைக்காண முயல்பவரிடத்தில் அப்பெருமானுக்கு அன்பு உண்டாவதில்லை'' என்று அவர் கூறியுள்ள நல்லுரை பொன்னெழுத்துக்களில் பொறித்துக் கொள்ளத்தக்கது.

"பிரிந்து நிற்றலே நம் வீழ்ச்சிக்குக் காரணம். நாம் வெளிநாடு கண்டு விருத்தி அடையவேண்டும். மேற்றிசை நாகரிகத்தின் நல்ல அம்சங்களைக் கைக்கொண்டு அவர்களுக்கு நமது ஆன்ம ஞானத்தை உபதேசித்தல் வேண்டும். உயிர் இருப்பதற்கு அடையாளம் ஓங்கிப் பரவுவதேயாகும்; இல்லாவிடில் இருந்த இடத்திலேயே இருந்து வளர்ச்சியின்றி அழுகி நாற்றமெடுத்து அழியவேண்டியதைத் தவிர நமக்கு வேறு வழியில்லை.'' இவ்வாறு விவேகானந்தர் கூறியுள்ளார்.

"மிகத் தாழ்ந்த சாதியானும் அறிவிலியும் ஏழையும் எழுத்தறியாதவனும் தெருப் பெருக்குவோனும் பறையனுங்கூட உன் இரத்தத்திற் சேர்ந்தவன் என்பதையும் உன் சகோதரன் என்பதையும் மறவாதே. ஓ வீரனே! தைரியமாயிரு; நீ இந்தியன் என்பதைப் பற்றிப் பெருமை பாராட்டு. 'நான் இந்தியன், ஒவ்

வொரு இந்தியனும் என் சகோதரனே' என்று சொல்லுவாய். 'கல்லாத இந்தியனும் ஏழை இந்திய னும் பிராமண இந்தியனும் பறைய இந்தியனும் எல் லாரும் என் சகோதரரே' என்று பறை சாற்று.... ...........'இந்தியரே என் சகோதரர்; இந்தியர்களே என் உயிர்........இந்திய ஜனசமூகமே நான் பிறந்து வளர்ந்த தொட்டில்; என் யௌவனத்தின் சிங்கா ரப் பூங்காவனம்; என் மூப்பின் புண்ணிய தபோ வனம்'—என்று பெருமையோடு முழக்குவாய். சகோ தரா! 'பாரத பூமியே எனக்குச் சிறந்த சொர்க்கம்! இந்தியாவின் க்ஷேமமே என் க்ஷேமம்' என்று தியா னம் செய்து, 'அன்னையே! எனக்கு ஆண்மை யருள் வாய்! என் பலவீனத்தைப் போக்கி, என் பேடித் தனத்தை நீக்கி, என்னை ஆண் மகனாக்குவாய்' என்று அல்லும் பகலும் பிரார்த்தனை செய்'' என்பது விவேகானந்தர் இந்திய இளைஞர்க்குச் செய்துள்ள தர்மோபதேசம்.

---

## 21. செந்நிறப் பூ

பல நிறங்கள் கொண்டது இவ்வுலகம். நம்மைச் சூழ்ந்துள்ள எல்லையற்ற ஆகாயத்தின் நிறம் நீலம். அதில் ஜொலிக்கும் சூரியனது நிறம் சிறிது செம்மை கலந்த வெள்ளை. இரவில் மினுமினுக்கும் அழகிய நட்சத்திரங்கள் பொதுவாக வெண்மையாய்த் தோன் றியபோதிலும் அவற்றுட் சில பச்சை, சில நீலம், சில சிவப்பு. நமது பூமியிலுள்ள மண்ணின் நிறம் எத்தனை .வகையானது! மனிதர்களின் நிறம் எத்

தனே! செடிகளின் நிறம் எத்தனே! புஷ்பங்களின் நிறம் எத்தனே!

பல நிறங்கள் கொண்டது அழகு. வானவில்லின் நிறங்களைக் கண்டு மகிழாதார் யார்? மயிலின் தோகையையும் பஞ்சவர்ணக் கிளியின் உடலையும் பார்த்துக் களியாதார் யார்? புஷ்பங்களே அற்ற 'குரோடன்' செடிகளை, அவற்றின் நிறமான அழகிய இலைகளின் பொருட்டு, நாம் வாங்கிப் பாதுகாத்து வளர்க்கவில்லையா?

பல நிறங்கள் கொண்டது ஒளி. நமக்கு இவ்வுலகத்தையும் இவ்வுலகத்திலுள்ள அழகிய பொருள்கள் அனைத்தையும் அளிக்கின்ற சூரிய வெளிச்சமானது ஏழு நிறங்கள் கொண்டது. அவற்றுள் சிவப்பு, மஞ்சள், நீலம், மூன்றும் முக்கியமான பிரதம வர்ணங்கள். ஆரஞ்சு, பச்சை, கருநீலம், ஊதா ஆகிய பிற நான்கு நிறங்கள் முற்கூறிய நிறங்களின் சேர்க்கையால் உண்டாவன. இவ்வகையான ஏழு நிறங்களின் கலப்பால் வெண்மை நிறமாக மாறிய ஒளியின் குணத்தாலேயே, இவ்வுலகில் நாம் காணும் வஸ்துக்கள் பற்பல நிறங்களோடு நமக்குத் தோன்றுகின்றன.

இந் நிறங்கள் ஏன் அமைக்கப்பட்டன? நாம் பார்த்துப் பார்த்து மகிழ்வதற்காகவா? அல்லது ஊன்றி நினைத்து நினைத்து ஆச்சரிய வலையில் மயங்குவதற்காகவா? அல்லது வேறு ஏதாவது பயனை எண்ணி இந்நிறங்கள் அமைக்கப்பட் டிருக்கின்றனவா? முன்னொரு காலத்தில் அறிவிற் குறைந்து

இறுமாப்பில் மிகுந்திருந்த மனிதவருக்கமானது இவ்வுலகிற் காணப்படும் சராசரங்கள் அனைத்தும் தனக்காகவே தன் அருமைத் தெய்வத்தால் படைக்கப்பட்டனவென்று எண்ணியிருந்தது. இப்பொழுது அறிவு முதிர முதிர, ஆராய்ச்சி மிக மிக, அப்பழைய கொள்கைகளை முற்றிலும் மறந்து, வேறுவகையான கண்களைக்கொண்டு இயற்கைத்தாயின் விசித்திர விநோதங்களைக் கவனிக்கிறது.

இவ்வுலகத்தில் காணப்படும் பிராணிகள் ஏன் நிறம் மாறுபாடுகளை உடையனவாய்த் தோன்றுகின்றன? சில ஜொலிக்கும் நிறங்களை உடையனவாயும் சில மங்கலான போர்வைகளை போர்த்தனவாயும் ஏன் காணப்படுகின்றன? புலியின்மேல் வரி ஏன்? சிங்கம் ஏன் மணல் நிறமாய்க் காணப்படுகின்றது? மிருகங்களுக்கு மேற்புறமாகிய முதுக்குப்புறம் நிறமுடையதாயும் அடிப்புறமான வயிறு வெண்மையாயும் தோன்றுவதேன்? ஓந்தி ஏன் பல நிறமாய் மாறுகிறது? இவ்வாறான கேள்விகளைத் தாமே தம்மைக் கேட்டுக்கொண்டு பற்பல வகையாய் விஷயங்களை ஆராய்ந்து உண்மையை அறிய முயலுகின்றனர் அறிவாளர். ஆராய்ச்சி முறைகளையே மேற்கொண்ட அறிவாளர்க்கு இவ்வுலகமானது ஒரு பரிசோதனைச் சாலை ஆகிவிடுகிறது. எந்தக் காட்சியைக் கண்டு களித்தாலும், எந்த ஒலியைக்கேட்டு இன்புற்றாலும், எந்தமணத்தை மோந்து மகிழ்ந்தாலும், எப்பொழுதும் அவர்கள் மனத்திலே அவர்கள் தூண்டுதலின்றியே "ஏன்? ஏன்?" என்ற வினாவானது எழுந்து

கொண்டேயிருக்கிறது. ஜூலியன்ஹக்ஸ்லி என்னும் ஜீவதத்துவ சாஸ்திர நிபுணரை இதற்கு ஓர் உதாரணமாகக் கூறலாம்.

நாம் எல்லாரும் ஊரூராய்ப் போய்ப் பற்பல விஷயங்களைக் கண்டும் கேட்டும் மகிழ்வதுபோலவே, அவரும் ஆப்பிரிக்காக் கண்டத்தில் சுற்றுப் பிரயாணம் செய்தபோது பலவற்றைக் கண்டும் கேட்டும் மகிழ்ந்து வந்தார். ஆப்பிரிக்காக் கண்டமானது பார்ப்பதற்குரிய காட்சிகள் பல உடையது. மரம் போலுயர்ந்த ஒட்டகைச் சிவிங்கியும், மலைபோலுயர்ந்த யானையும், யானையை நிகர்க்கும் கண்டாமிருகமும், நீர் யானையும், எருமையும், காட்டுப் பன்றியும், ஜமக்காளம் போர்த்ததுபோல்தோற்றும் வரிக் குதிரையும், விதவிதமான மான்களும், தேர்வடம் போல் நீண்ட மலைப் பாம்புகளும், மனிதனைப் போலவே தோன்றும் குரங்குகளும், இன்னும் விந்தை விந்தையான பிராணிகள் பலவும், இவை அனைத்துக்கும் அரசனாகக் கொண்டாடப்படும் சிங்கங்களும் அக்கண்டத்திலே பற்பல இடங்களிற் சுலபமாகக் கண்ணுக்குத் தென்படுகின்றன. அதிலுள்ள மரம் செடி கொடி வகைகளும் எண்ணிறந்தவை. பொன்னும் வைரமும் விளையும் கண்டம் அது. அங்கே பிரயாணம் செய்யும் ஒருவன் அதன் காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தும், திகைத்தும், பயந்தும், வியந்தும் நடப்பது சகஜம். அவன் மெய்ம்மறந்து தன்னுடைய அனுபவங்களையே பெரியனவாக நினைப்பது தான் இயல்பு. ஆப்பிரிக்காவில் சுற்றுப் பிரயாணம்

செய்த ஹக்ஸ்லியும் இவ்வாறு அனுபவித்து வந்தாரெனினும் கேள்வி கேட்பதை வழக்கமாகக்கொண்டுவிட்ட அவர் மனமானது அவரை அடிக்கடி பற்பல கேள்விகள் கேட்டுக்கொண்டே வந்தது.

ஆப்பிரிக்காவிற் சுற்றியபோது இப்படித் தம் மனம் கேட்ட ஒரு விஷயத்தைப் பற்றி அவர் சொல்லுவதின் சாராம்சமாவது:—

ஆப்பிரிக்காவின் கிழக்குப் பாகத்தில் பிரயாணம் செய்யும் ஒருவன் அங்கே சிவப்பு நிறமுள்ள புஷ்பங்கள் எங்கும் செறிந்து கிடப்பதைக் கவனிக்காமல் இருக்க முடியாது. அவற்றின் நிறம் நெருப்புப்போன்ற சுத்தமான சிவப்பு. அந்நாட்டிலே மலைச் சாரல்களில் நெருங்கி வளர்ந்த பெரிய மரங்களிற் பூத்த செந்நிறப் புஷ்பங்களைக் காணும்போது மலையே நெருப்புப் பிடித்து எரிவதுபோல் தோற்றும். புஷ்பங்கள் பூக்கும்போது அம்மரங்கள் பொதுவாக இலைகளை உதிர்த்துவிடுகின்றன; ஆதலால் பூவின் சிவப்பு நிறம் நன்றாக எடுத்துக் காட்டப்படுகிறது. அந்நாட்டிலே எங்கும் பெரிய மரங்களும் சிறிய மரங்களும் குறுஞ் செடிகளும் புதர்களும் பலவகை அல்லிப் புஷ்பங்களும் ஒரே சிவப்பு மயமாய் விளங்குகின்றன. அவற்றின் அழகை வருணிக்க இயலாது. எங்கும் நிறைந்த இச்செந்நிறக் காட்சியானது கண்ணைப் பறிக்கின்றது. 'ஏன் இச்செந்நிறச் செறிவு?' என்று நான் கூர்ந்து ஆராயப் புகவில்லை; ஆயினும் என்னை யறியாமலே என் மன

மானது அக்கேள்வியைக் கேட்டுக்கொண்டிருந்தது என்றே தோன்றுகிறது.

அஃது எப்படியாயினும் சரி; திடீரென்று ஒரு நாள் அக்கேள்விக்கு விடை என் மனத்தில் உதித்தது; அதாவது இந்நிறத்திற்குக் காரணம் **சூரிய பட்சிகள்** எனப்படும் ஒருவகைச் சிறு பட்சியினம் என்பதே. இப்பட்சியினமும் இதுபோன்ற வேறு சிறு பட்சிகளும் இந்நாட்டிலே ஏராளமாகக் காணப்படுகின்றன. இவை பெரும்பாலும் புஷ்பங்களிலுள்ள தேனை உண்டும், தேனைப் பருகுவதற்காகப் புஷ்பங்களின் இதழ்களில் வந்து உட்காரும் தேனீக்கள் வண்டுகள் முதலிய சிறு பூச்சிகளைத் தின்றும் உயிர் வாழ்கின்றன.

தேனீக்களின் கண்களுக்கு ஒரு விசேஷ குணமுண்டு. நமது கண்களுக்கு ஊதா நிறம் முதல் சிவப்பு நிறம் ஈறாக உள்ள ஏழு நிறங்களே புலனாகின்றன. ஊதாவுக்கு மேற்பட்ட நிறங்களின் கிரணங்கள் நமது கண்களுக்குப் புலனாவதில்லை. ஊதாவுக்குமேல் எவ்வகை நிறமும் இருப்பதாக நாம் உணருவதில்லை. நமது கண்களுக்குப் புலனாகாத இந்நிறமானது தேனீக்களின் கண்களுக்கு எளிதில் புலனாகின்றது. ஆனால், இதற்கு எதிரிடையாக, நாம் சிவப்பு என்று கூறும் நிறமானது அவற்றின் கண்களுக்குப் புலனாவதில்லை. தேனீக்களுக்குச் சிவப்பு என்பது ஒரு நிறமாகவே தோன்றுவதில்லை; அது நிறமற்ற வெறுங்கறுப்பாகவே தோன்றுகிறது. பட்சிகளோவெனில் சிவப்பு நிறத்தை நன்கு உணர்கின்றன.

அவற்றிற்கு எல்லா நிறங்களைக் காட்டிலும் சிவப்பு நிறத்தின்மேல் அதிகப் பிரீதி உண்டா இல்லையா என்பதற்குப் போதுமான ஆதாரங்கள் இன்னும் நமக்குக் கிடைக்கவில்லை.

புஷ்பங்களின் நிறமும் மணமும் நாம் பார்த்துக் களிக்கும் பொருட்டும், மோந்து மகிழும் பொருட்டும் ஏற்பட்டன அல்ல. அவற்றைப் படைத்தவர் நம்மை மட்டிலும் பொருளாக எண்ணிப் பிற பொருள்கள் யாவற்றையும் நமது பிரயோசனத்துக்காக அமைக்கவில்லை. புஷ்பங்களுக்குப் பரோபகார சிந்தனை சிறிதும் கிடையாது. தமது இனம் பெருகும் பெரிய முயற்சியில் ஈடுபட்ட புஷ்பங்கள் அப்பெரு முயற்சிக்கு உரிய துணையாகவே நிறத்தையும் மணத்தையும் பெற்றிருக்கின்றன.

ஒவ்வொருவகைச் செடியும் அதன் அதன் இனம் பெருகும் பொருட்டுப் புஷ்பங்களை உண்டாக்கிக் கொண்டிருக்கின்றது. ஒரு புஷ்பத்திலுள்ள மகரந்தத் தூளானது மற்றொரு புஷ்பத்தில் போய்ப் படிய வேண்டும்; அப்பொழுது அதிலேயுள்ள கருவோடு கலக்கும். அதனால் சந்ததி விருத்தி ஏற்படுகிறது. இவ்வாறு புஷ்பத்தினின்று புஷ்பத்துக்கும் செடியினின்று செடிக்கும் மகரந்தத்தூளை எடுத்துச் செல்வதற்குத் தகுந்த தூதர்கள் வண்டுகள், தேனீக்கள், வண்ணாத்திப் பூச்சிகள், விட்டில் பூச்சிகள்

முதலிய பூச்சியினத்தைச் சார்ந்த சிறுபிராணிகளும் சிற்சில பட்சிகளும் ஆகும். ஒவ்வொரு வகைப் புஷ்பமும் ஒவ்வொரு குறிப்பிட்ட பூச்சி வகையையோ, குறிப்பிட்ட பட்சிவகைகளையோ தனக்கு ஏற்ற துணையாகக் கொண்டு அவ்வச்சிறு பிராணியின் சுபாவத்துக்கும், உடலமைப்புக்கும், ஆகார முறைக்கும் தகுந்தபடி தனது உடலையும் குணத்தையும் மணத்தையும் மாற்றி யமைத்துக்கொண்டிருக்கின்றது.

இரவிற் சஞ்சரிக்கும் வண்ணாத்திப் பூச்சிகளின் உதவியை நாடும் செடிகள் இரவில் எளிதிற் புலனாகக் கூடிய வெண்மை நிறமுள்ள நறுமணம் பொருந்திய புஷ்பங்களைத் தாங்கி நிற்கின்றன. ஆதலால் முல்லை மல்லிகை போன்ற வெள்ளைப் புஷ்பங்கள் பொதுவாகச் சாயங்கால நேரத்தில் மலர்கின்றன; இரவில் ஒளிர்கின்றன; மணம் வீசுகின்றன. தாமரை, ரோஜா முதலிய நிறமுள்ள புஷ்பங்கள் காலையில் மலர்ந்து மகிழ்ந்து பகலிற் சஞ்சரிக்கும் தேனீக்கள், வண்டுகள் முதலியவற்றின் மனங்களைத் தமது நிறங்களாலும் மணங்களாலும் கவர்கின்றன. அவற்றைப் போலவே, பகலில் உலவி விளையாடும் பட்சிகளின் துணையை நாடும் செடிகளும் அவற்றிற்கு விருப்பமான, தேனீக்களுக்குப் புலனாகாத செந்நிறப் பூக்களைத் தாங்குகின்றன. இதுதான் செந்நிறப் புஷ்பங்கள் பூப்பதின் காரணம்.

இவ்வகைப் பூச்சிகள் குளிர் நாடுகளில் ஏன் மிகுந்து காணுவதில்லை என்பதற்குக் காரணமும் இதுவே தான். ஒரு பட்சியினமானது இப்பூவையே ஆதாரமாகக் கொண்டு உயிர்வாழ வேண்டுமானல் இப்புஷ்பமானது வருஷம் முந்நூற்றறுபத்தைந்து நாளும் புஷ்பிப்பது அவசியமல்லவா? குளிர் நாடுகளில் பனி பெய்யும் காலத்தில் மரம் செடி கொடி எல்லாம் குளிரின் மிகுதியால் கருகிப் போகும்போது இப் புஷ்பங்களுக்கு எங்கே போவது? ஆகையால் வருஷம் முழுவதும் புஷ்பிப்பதற்கு வேண்டிய சௌகரியங்களுள்ள மழைப் பாங்கான உஷ்ணப் பிரதேசங்களிலேதான் இவ்வகையாய்ப் பட்சிகள் வாழமுடியும். ஆதலால் அத்தகைய பிரதேசமாகிய கீழ் ஆப்பிரிக்காவிலே செந்நிறப் பூக்களின் ஜோதி நாலு பக்கமும் சிறந்து விளங்குகின்றது.

—P. N. அப்புசாமி ஐயர் B. A., B. L.

---

# செய்யுட் பகுதி.

## I. நீதிநெறி விளக்கம்.

அறம்பொருள் இன்பமும் வீடும் பயக்கும்
புறங்கடை நல்லிசையும் நாட்டும்—உறுங்கவலொன்
றுற்றுழியுங் கைகொடுக்கும் கல்வியி னூங்கில்லை
சிற்றுயிர்க் குற்ற துணை. (1)

வருந்தித்தாங் கற்றன ஓம்பாது மற்றும்
பரிந்துசில கற்பான் தொடங்கல்—கருந்தனங்
கைத்தலத்த வுய்த்துச் சொரிந்திட் டரிப்பரித்தாங்
கெய்த்துப் பொருள்செய் திடல். (2)

கற்றோர்க்குக் கல்வி நலனே கலனல்லால்
மற்றோர் அணிகலம் வேண்டாவாம்—முற்ற
முழுமணிப் பூணுக்குப் பூண்வேண்டா யாரே
அழகுக் கழகுசெய் வார். (3)

முற்றும் உணர்ந்தவர் இல்லை முழுவதூஉம்
கற்றனம் என்று களியற்க—சிற்றுளியாற்
கல்லுந் தகரும் தகரா கனங்குழாய்
கொல்லுலைக் கூடத்தி னால். (4)

தம்மின் மெலியாரை நோக்கித் தமதுடைமை
அம்மா பெரிதென் றகமகிழ்க—தம்மினுங்
கற்றாரை நோக்கிக் கருத்தழிக கற்றவெல்லாம்
எற்றே இவர்க்குநாம் என்று. (5)

பிறராற் பெருஞ்சுட்டு வேண்டுவான் யாண்டும்
மறவாமே நோற்பதொன் றுண்டு—பிறர்பிறர்
சீரெல்லாந் தூற்றிச் சிறுமை புறங்காத்து
யார்யார்க்குந் தாழ்ச்சி சொலல். (6)

கண்கூடாப் பட்டது கேடெனினும் கீழ்மக்கட்
குண்டோ உணர்ச்சிமற் றில்லாகும்—மாண்டெரி
தான்வாய் மடுப்பினும் மாசுணங் கண்துயில்வ
பேரா பெருமூச் செறிந்து. (7)

வாங்குங் கவளத் தொருசிறிது வாய்தப்பின்
தூங்குங் களிறோ துயருறா—அங்கதுகொண்
டூரும் எறும்பிங் கொருகோடி உய்யுமால்
ஆருங் கிளையோ டயின்று. (8)

மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்துஞ்சார்
எவ்வெவர் தீமையு மேற்கொள்ளார்—செவ்வி
அருமையும் பாரார் அவமதிப்புங் கொள்ளார்
கருமமே கண்ணாயி னார். (9)

புறநட் டகம்வேர்ப்பார் நச்சுப் பகைமை
வெளியிட்டு வேறுதல் வேண்டும்—கழிபெருங்
கண்ணோட்டஞ் செய்யார் கருவியிட் டாற்றுவார்
புண்வைத்து மூடார் பொதிந்து. (10)

இனியவர் என்சொலினும் இன்சொல்லே இன்னார்
கனியு மொழியுங் கடுவே—அனல்கொளுந்தும்
வெங்காரம் வெய்தெனினும் நோய்தீர்க்கும் மெய்பொடிப்பச்
சிங்கி குளிர்ந்துங் கொலும். (11)

வள்ளன்மை யில்லாதான் செல்வத்தின் மற்றையோன்
நல்குரவே போலும் நனிநல்ல—கொன்னே
அருளிலன் அன்பிலன் கண்ணறையன் என்று
பலரால் இகழப் படான். (12)

வஞ்சித் தொழுகும் மதியிலிகாள் யாவரையும்
வஞ்சித்தோ மென்று மகிழன்மின்—வஞ்சித்த
எங்கும் உளனொருவன் காணுங்கொல் என்றஞ்சி
அங்கங் குலைவ தறிவு. (13)

---

## II. இனியது நாற்பது.

ஏவது மாறா இளங்கிளை முன்னினிதே
நாளும் நவைபோகான் கற்றல் மிகவினிதே
ஏருடையான் வேளாண்மை தானினிது ஆங்கினிதே
தேரின் கோள் நட்புத் திசைக்கு. (1)

மானம் அழிந்தபின் வாழாமை முன்னினிதே
தானம் அழியாமை தானடங்கி வாழ்வினிதே
ஊனமொன்று இன்றி உயர்ந்த பொருளுடைமை
மானிடர்க்கு எல்லாம் இனிது. (2)

கற்றார்முன் கல்வி உரைத்தல் மிகவினிதே
மிக்காரைச் சேர்தல் மிகமாண முன்னினிதே
எட்டுணை யானும் இரவாது தானீதல்
எத்துணையும் ஆற்ற இனிது. (3)

நட்டார்ப் புறங்கூறான் வாழ்தல் நனியினிதே
பட்டாங்குபேணிப் பணிந்தொழுகல் முன்னினிதே
முட்டுஇல் பெரும்பொருள் ஆக்கியக்கால் மற்றது
தக்குழி ஈதல் இனிது. (4)

தானம் கொடுப்பான் தகையாண்மை முன்னினிதே
மானம் படவரின் வாழாமை முன்னினிதே
ஊனம்கொண் டாடார் உறுதி உடையவை
கோள் முறையாற் கோடல் இனிது. (5)

பிச்சைபுக்(கு) ஆயினும் கற்றல் மிகஇனிதே
நற்சபையில் கைகொடுத்தல் சாலவும் முன்இனிதே
முத்தேர் முறுவலார் சொல்லினி(து); ஆங்கினிதே
தெற்றவும் மேலாயார்ச் சேர்வு. (6)

---

## III. இன்னா நாற்பது

கொடுங்கோல் மறமன்னர் கீழ்வாழ்தல் இன்னா
நெடுநீர் புணைஇன்றி நீந்துதல் இன்னா
கடுமொழி யாளர் தொடர்(பு) இன்னா; இன்னா
பெருவலியார்க்(கு) இன்னா செயல். (1)

ஆற்றல் இலாதான் பிடித்த படைஇன்னா
நாற்றம் இலாத மலரின் அழகின்னா
தேற்றம் இலாதான் துணிவின்னா ஆங்கின்னா
மாற்றம் அறியான் உரை. (2)

பகல்போலும் நெஞ்சத்தார் பண்பின்மை இன்னா
நகைஆய நண்பினார் நார்இன்மை இன்னா
இகலின் எழுந்தவர் ஓட்டின்னா இன்னா
நயம்இல் மனத்தவர் நட்பு. (3)

பொருள்உணர்வார் இல்வழிப் பாட்டுரைத்தல்இன்னா
இருள்கூர் சிறுநெறித் தாம்தனிப்போக் கின்னா
அருளிலார் தம்கண் செலவின்னா இன்னா
பொருள் இல்லார் வண்மை புரிவு. (4)

உண்ணாது வைக்கும் பெரும்பொருள் வைப்பின்னா
நண்ணாப் பகைவர் புணர்ச்சி நனிஇன்னா
கண்ணில் ஒருவன் வனப்பின்னா ஆங்கின்னா
எண்இலான் செய்யும் கணக்கு. (5)

ஆன்றவிந்த சான்றோருள் பேதை புகலின்னா
மான்றிருண்ட போழ்தின் வழங்கல் பெரிதின்னா
நோன்றவிந்து வாழாதார் நோன்பின்னா ஆங்கின்னா
ஈன்றாளை ஓம்பா விடல். (6)

---

## IV. நாலடியார்

இம்மை பயக்குமால்; ஈயக்குறைவின்றால்;
தம்மை விளக்குமால்; தாமுளராக் கேடின்றால்;
எம்மை உலகத்தும் யாம்காணேம் கல்விபோல்
மம்மர் அறுக்கும் மருந்து. (1)

கல்லாது நீண்ட ஒருவன் உலகத்து
நல்லறி வாளர் இடைப்புக்கு—மெல்ல
இருப்பினும் நாயிருந் தற்றே; இராஅ
துரைப்பினும் நாய்குரைத் தற்று. (2)

கல்வி கரையில; கற்பவர் நாள்சில;
மெல்ல நினைக்கின் பிணிபல—தெள்ளிதின்
ஆராய்ந்(து) அமைவுடைய கற்பவே நீரொழியப்
பாலுண் குருகின் தெரிந்து. (3)

நல்ல குலமென்றும் தீய குலமென்றும் [பின்
சொல்லள(வு) அல்லால் பயனில்லை;—தொல்சிறப்
ஒண்பொருள் ஒன்றோ? தவம் கல்வி ஆள்வினை
என்றிவற்றால் ஆகும் குலம். (4)

கல்லாரே ஆயினும் கற்றாரைச் சேர்ந்தொழுகின்
நல்லறிவு நாளும் தலைப்படுவார்;—தொல்சிறப்பின்
ஒண்ணிறப் பாதிரிப்பூச் சேர்தலால் புத்தோடு
தண்ணீர்க்குத் தான்பயந் தாங்கு. (5)

தான்கெடினும் தக்கார்கே(டு) எண்ணற்க; தன்னுடம்பின்
ஊன்கெடினும் உண்ணார்கைத்(து)உண்ணற்க;—வான்கவிந்த
வையக மெல்லாம் பெறினும் உரையற்க
பொய்யோ(டு) இடைமிடைந்த சொல். (6)

---

## V. பழமொழி

பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதைதன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்;—நல்லாய்
மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்
நுணலும்தன் வாயால் கெடும். (1)

புன்சொல்லும் நன்சொல்லும் பொய்யின் றுணர்கிற்பார்
வன்சொல் வழியராய் வாழ்தலும் உண்டாமோ?
புன்சொல் இடர்ப்படுப்ப(து) அல்லால் ஒருவனை
இன்சொல் இடர்ப்படுப்ப(து) இல். (2)

நெறியால் உணராது நீர்மையும் இன்றிச்
சிறியார் எளியரால் என்று—பெரியாரைத்
தங்கள்நேர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத்(து) அற்று. (3)

கல்லா தவரிடைக் கட்டுரையின் மிக்க(து) ஓர்
பொல்லாத(து) இல்லை ஒருவற்கு;—நல்லாய்!
இழுக்கத்தின் மிக்க இழி(வு) இல்லை; இல்லை
ஒழுக்கத்தின் மிக்க உயர்வு. (4)

முட்டின்(று) ஒருவர் உடைய பொழுதின்கண்
அட்டிற்றுத் தின்பவர் ஆயிரவர்ஆபவே;
கட்டலர்தார் மார்ப! கலியூழிக் காலத்துக்
கெட்டார்க்கு நட்டாரோ இல். (5)

பெரியோர்க்குச் செய்யும் சிறப்பினைப் பேணிச்
சிறியார்க்குச் செய்து விடுதல்—பொறிவண்டு
பூமேல் இசைமுரலும் ஊர! அது வன்றே
நாய்மேல் தவிசிடும் ஆறு. (6)

## VI. அறநெறிச்சாரம்

மெய்ம்மை பொறையுடைமை மென்மை தவமடக்கம்
செம்மையொன் றின்மை துறவுடைமை—நன்மை
திறம்பா விரதந் தரித்தலோ டின்ன
அறம்பத்தும் ஆன்ற குணம். (1)

இன்சொல் விளைநிலமா ஈதலே வித்தாக
வன்சொற் களைகட்டு வாய்மை எருவட்டி
அன்புநீர் பாய்ச்சி அறக்கதிர் ஈனவோர்
பைங்கூழ் சிறுகாலைச் செய். (2)

வைகலும் நீருட் கிடப்பினுங் கல்லிற்கு
மெல்லென்றல் சால அரிதாகும் அஃதேபோல்
வைகலும் நல்லறங் கேட்பினுங் கீழ்கட்குக்
கல்லினும் வல்லென்னும் நெஞ்சு. (3)

காய்தல் உவத்தல் அகற்றி ஒருபொருட்கண்
ஆய்தல் அறிவுடையார் கண்ணதே—காய்வதன்கண்
உற்றகுணந் தோன்றா தாகும் உவப்பதன்கண்
குற்றமுந் தோன்றாக் கெடும். (4)

பலகற்றோம் யாமென்று தற்புகழ்தல் வேண்டா
அலர்கதிர் ஞாயிற்றைக் கைக்குடையுங் காக்கும்
சிலகற்றார் கண்ணும் உளவாம் பலகற்றார்க்
கச்சாணி யன்னதோர் சொல். (5)

தானே தனக்குப் பகைவனும் நட்டானும்
தானே தனக்கு மறுமையும் இம்மையும்
தானேதான் செய்த வினைப்பயன் துய்த்தலால்
தானே தனக்குக் கரி. (6)

---

## VII. பெண்கள் பந்து விளையாடும் காட்சி

பொன் இலங்கு பூங்கொடி
 பொலஞ்செய் கோதை வில்லிட
மின் இலங்கு மேகலைகள்
 ஆர்ப்ப ஆர்ப்ப எங்கணும்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
 சென்றுபந் தடித்துமே!
தேவரார மார்பன் வாழ்க!
 என்றுபந் தடித்துமே! (1)

பின்னும் முன்னும் எங்கணும்
 பெயர்த்துவந் தெழுந்துலாய்
மின்னும் மின்னிளங் கொடி
 வியனிலத் திழிந் தெனத்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
 சென்றுபந் தடித்துமே!
தேவரார மார்பன் வாழ்க!
 என்றுபந் தடித்துமே! (2)

துன்னிவந்து கைத்தலத்
 திருந்த தில்லை நீணிலம்
தன்னி னின்றும் அந்தரத்
 தெழுந்த தில்லை தானெனத்
தென்னன் வாழ்க! வாழ்க! என்று
 சென்றுபந் தடித்துமே!
தேவரார மார்பன் வாழ்க!
 என்றுபந் தடித்துமே! (3)

—சிலப்பதிகாரம்.

பொங்கு கனங்குழை மண்டிய கெண்டை
புரண்டு புரண்டாடக்—குழல்
மங்குலில் வண்டு கலைந்தது கண்டு
மதன்சிலை வண்டோட—இனி
இங்கிது கண்டுலகென்படும் என்படும்
என்றிடை திண்டாட—மலர்ப்
பங்கய மங்கை வசந்த சவுந்தரி
பந்து பயின்றாளே. (4)

சூடக முன்கையில் வால்வளை கண்டிரு
தோள்வளை நின்றாடப்—புனை
பாடகமுஞ்சிறு பாதமும் அங்கொரு
பாவனை கொண்டாட—நய
நாடகம் ஆடிய தோகை மயிலென
நன்னகர் வீதியிலே—அணி
ஆடகவல்லி வசந்த ஒய்யாரி
அடர்ந்துபந் தாடினளே! (5)

இந்திரை யோஇவள்! சுந்தரியோ! தெய்வ
ரம்பையோ! மோகினியோ!—மனம்
முந்தியதோ! விழிமுந்தியதோ! கரம்
முந்தியதோ! எனவே—உயர்
சந்திரசூடர் குறும்பல ஈசுரர்
சங்கணி வீதியிலே—மணிப்
பைந்தொடிநாரி வசந்த ஒய்யாரிபொற்
பந்துகொண் டாடினளே! (6)

—குற்றாலக் குறவஞ்சி.

---

## VIII. பறவையின் சிந்தனை

(ஓர் ஆங்கிலக்கவியைத் தழுவி யெழுதப்பட்டது)

(முட்டைக்கரு)

முற்றுங் கருவாகி—ஒருசிறு
முட்டையில் வாழ்கையிலே
சுற்று முலகெனக்கும்—உருண்டவெண்
தோடாயிருந்ததம்மா. (1)

(கூட்டிற் குஞ்சு)

குஞ்சுப் பருவத்திலே—பிறிதொரு
கூட்டிலிருக்கையிலே
விஞ்சுமுலகினையான்—உலர்ந்தபுல்
வீடாகக் கண்டேனம்மா. (2)

(இறகுமுளைக்கும் சிறுபறவை)

இறகு முளைக்கையிலே—பறந்திட
யானும் பழகையிலே
நிறையு முலகெனக்குத்—தழைகொடி
நேரிட மானதம்மா.

(பறக்கும் பெரும் பறவை)

நீண்ட வெளிவரவே—உயர்ந்தவிண்
நீலந் தெரிந்ததம்மா
ஆண்டவனன்றி எவர்—உலகை
அறிந்திட வல்லாரம்மா.

—தேசிக விநாயகன்.

---

## IX. "நினைப்பதொன்று முடிவதொன்று"

[ஒரு நாள் மாலைநேரம் ஒரு வண்டு ஒரு தாமரைப் பூவிலுள்ள தேனை அருந்திக்கொண்டிருந்தது. கதிரவன் முற்றும் மறையவே தாமரை மலர் குவிந்து விட்டது. அப்பொழுது அதனுள்ளிருந்தவண்டு எண்ணிய எண்ணமும் அது நிறைவேறாது அழிந்து போனவாறும் பின் வரும் பாடல் கூறும். இது வடமொழியிலுள்ள ஒரு சுலோகத்தின் மொழிபெயர்ப்பு]

இருளு மகலும் இரவியு முதித்தெழும்
பொருவிலித் தாமரைப் பூவும் மலரும்
மலரும் பொழுதிவ் வன்சிறை நீங்கி
உலகி லெங்கும் உலவித் திரிந்து
பூவெழு பற்பல புதுவனம் கண்டு
நாவெழு சுவைதரு நறைமிக வுண்டு
வாழ்குவ னென்றொரு மதுகர மிருப்பத்
தாழ்மத வேழமொன் றூழ்கய மிறங்கிப்
பாசிலை பூவெலாம் பறித்து
வீசி யெறிந்து வெறிகொண் டதுவே.

—தேசிக விநாயகன்.

---

## X. கருணைக்கடல்

[குறிப்பு:—'கருணைக்கடல்' என்ற இப்பாவானது மகான் புத்தருடைய அற்புதசரித்திரத்தின் ஒரு பகுதியாகும். 'ஆசிய ஜோதி'(Light of Asia)என்னும் ஆங்கிலப் புத்தகத்தினை யொட்டி இது யாக்கப்பட்டுளது. ஆட்டுக் கூட்டத்தின் மத்தியில் இடர்ப்படும் நொண்டியாட்டுக் குட்டியைப் புத்தர் தம் தோளில் எடுத்துக் கொண்டு பிம்பிசாரன் யாகஞ் செய்யுமிடத்தை நோக்கிச் செல்லுவதிலிருந்து கதை தொடங்குகிறது.]

ஆட்டுமந்தையைக் கண்டிரங்குதல்.

மந்தை பெரியமந்தை—உணவின்றி
வாடி மெலியுமந்தை
சிந்தை தளருமந்தை—நடக்கவும்
சீவனிலாத மந்தை (1)

தன்னந்தனியாக—ஒருமறி
தாவி முன்னேடுதையோ
பின்னேரிளமறியும்—கிந்தியிங்கு
பீடைப்படுதே ஐயோ. (2)

கல்லெறி கொண்டதுவோ—விழுந்தொரு
கால் முடமானதுவோ
செல்லும் வழிநீள—உதிரமும்
சிந்திப் பெருகுதையோ. (3)

ஓடுமறிதேடித்—தாயுமுன்னில்
ஓரடிவைத்தவுடன்
வாடுமறியை எண்ணி—விரைந்துபின்
வந்து தயங்குதையோ. (4)

வேறு

(தாயாட்டின் துயர் போக்குதல்)

இத்தனையுங் கண்டுமன மிரங்கி நொண்டும்
இளமறியை யிருகரத்தி னெடுத்து வையம்
அத்தனையுந் தாங்குபுய மணிய ஏந்தி
அருளுருவா மண்ணலுமத் தாயை நோக்கி. (5)

வேறு

"அல்லலுற வேண்டாம்—இனித்துயர்
ஆறிவருவாயம்மா
செல்லுமிடத்தி லுன்றன்—மதலையைச்
சேர்த்து விடுவேனம்மா. (6)

வேறு

(இடையரைக் கண்டு வினவுதல்)

என்றுகனிந் துளமுருகி நின்ற காலை
எமன்விட்ட தூதுவர்போ லாட்டை யெல்லாம்
குன்றிருந்து துரத்திவரு மவரைக் கண்டு
குவலயத்தி லருள்மாரி பொழியு மையன். (7)

வேறு

"மாலைப் பொழுதின்னு மாகவில்லை—வெயில்
மண்டை பிளந்து வெடிக்குதையோ
சாலைவழியிந்த ஆடுகளும்—எங்கே
சாய்ந்து செலுமையாகூறு" மென்றான். (8)

(இடையர் மறுமொழி கூறுதல்)

அம்மொழி கேட்டவ் விடையருமே—"எம்மை
ஆளு மிறைவன தாணையினல்
செம்மறி நூறு வெள்ளாடு மொரு நூறு
சேர்த்து வருகின்றோம்" என்றுரைத்தார். (9)

இன்றிராயாகம் முடியுதென்றார்—அதில்
இத்தனையுங் கொலையாகுமென்றார்
நின்றுசொல நேரம் இல்லையென்றார்—இன்னும்
நீண்டவழிபோக வேண்டுமென்றார். (10)

வள்ளலுமுள்ளம் வருந்தியானு—மந்த
மாமகம் காணவருவேனென்று
துள்ளு மறியுஞ்சுமந்துகொண்டு—தாயும்
சோர்ந்து தொடர வழிநடந்தான். (11)

(வீதியிற் கண்டவர் வியந்து கூறுதல்)

பாதையிற் சென்றவர் பார்த்து நின்றார்—ஒரு
பக்கமாய் வண்டிகளோட்டி நின்றார்.
மாதவம் ஈதலால் வேறுளதோ—என
வாயார வாழ்த்திப் புகழ்ந்து நின்றார். (12)

கூடமெடுத்தகை தாழ்ந்திடாமல்—ஒரு
கொல்லனும் கண்டு திகைத்து நின்றான்
ஊடுபாவோட்டிய சாலியனும்—நூலை
ஓட்டிமுடியாது விட்டுவந்தான். (13)

மண்ணைச் சுமந்து வருங்குயவன்—ஈதோர்
மாமுனியென்று வணங்கி நின்றான்
எண்ணெய்க் குடமேந்து வாணியனும்—இவர்
யாரோ பெரியவரெனப்பணிந்தான். (14)

பள்ளிச் சிறுவரும் சாடிவந்தார்—அவர்
பக்கத் தண்ணுவியும் ஓடிவந்தார்
கள்ளரும் உள்ளம் மறந்து நின்றார்—வட்டக்
காரரும் காசுப்பை விட்டுவந்தார். (15)

மாடும் அரிசியைத் தின்றதம்மா—அதை
மாற்றி யடிப்பாரும் இல்லையம்மா
வீடும் திறந்து கிடந்ததம்மா—உலை
வெந்திடு சோறும் குழைந்ததம்மா. (16)

## வேறு

வையமிசை உயிர்கள்படுந் துயரை எண்ணி
மறுகுமுளத் தயலொன்று மறியா ஞகி
ஐயனுமவ் வீதிவழி நடந்து மன்னன்
அரியமகஞ் செய்யுமிடம் அணுகினனே. (17)

## வேறு

(யாகசாலை வருணனை)

தாரணி மன்னவன் பிம்பிசாரன்—யாக
சாலை நடுவினில் வந்து நின்ருன்
ஆரண மோதிய அந்தணரும்—நிரந்
தங்கிரு பக்கமாய்க் கூடி நின்ருர். (18)

மந்திரமோதி எரிவளர்த்தார்—புகை
வானையளாவி எழுந்ததம்மா
இந்தனமிட்டுப் பெருக்கி நின்ருர்—தீயும்
ஏழுநாவிட்டுச் சுழன்றதம்மா. (19)

வேதம் விதித்த விதிமுறையில்—ஒரு
வெள்ளாடுகண்டு பிடித்துவந்து
பாதகமான பலியிடவே—அங்குப்
பாரிற் கிடத்தி யிருந்தாரம்மா. (20)

(புத்தர் கொலை மறுத்தல்)

காலிலே கட்டிய கட்டவிழ்த்தான்—ஆட்டின்
கண்டமிறுக்கிய கட்டவிழ்த்தான்
வாலிலே கட்டிய கட்டவிழ்த்தான்—அதன்
வாயினிற்கட்டும் அவிழ்த்துவிட்டான். (21)

நின்றவர்கண்டு நடுங்கினரே—ஐயன்
நேரிலே நிற்கவும் அஞ்சினரே
துன்றுகருணை நிறைந்தவள்ளல்—அங்குச்
சொன்னமொழிகளைக் கேளுமையா. (22)

வாழுமுயிரினை வாங்கிவிடல்—இந்த
மண்ணிலெவர்க்கும் எளிதாகும்
வீழுமுடலை எழுப்புதலோ—ஒரு
வேந்தன் நினைக்கிலும் ஆகாதையா. (23)

யாரும் விரும்புவதின்னுயிராம்—அவர்
என்றுமே காப்பது மன்னதேயாம்
பாரில் எறும்பும் உயிர்பிழைக்கப்—படும்
பாடுமுழுதும் அறிந்திடீரோ? (24)

காடுமலையெலாம் மேய்ந்துவந் தாடுதன்
கன்று வருந்திடப் பாலையெல்லாம்
தேடியும் மக்களை யூட்டுவதும்—ஒரு
தீயசெயலென எண்ணினிரோ. (25)

மேடையில் நீங்களும் மூடிப்படுத்திட
மெல்லிய கம்பளி தானளித்து
வாடையிலாடிக் கொடுகுவதும்—அதன்
வஞ்சகச் செய்கையோ சொல்லுமையா. (26)

அம்புவி மீதிலிவ் வாடுகளும்—உம்மை
அண்டிப் பிழைக்கு முயிரலவோ
நம்பியிருப்பவர் கும்பியெரிந்திடில்
நன்மையுமக்கு வருமோ ஐயா. (27)

காட்டுப்புலியின் கொடுமையஞ்சி—உங்கள்
கானிழல் தங்கிய ஆடுகளை
நாட்டுப்புலியெனக் கொல்லுவதோ—அந்த
நான்மறை போற்றிய நீதி ஐயா. (28)

மண்ணில் வளர்ந்திடும் புல்லை யுண்ணும்—வான
மாரி பொழிந்திடும் நீரை யுண்ணும்
எண்ணி நீர் செய்யும் உதவியென்னும்—இதை
ஏனோ உணர்ந்திலீர் மானிடரே! (29)

மன்னுயிரெல்லா முலகி லொருதாயின்
மக்களென்றுண்மை யறிந்திடீரோ
தன்னுயிர் போற்றிப் பெரும்பழி செய்வது
சண்டாளர் கண்ட நெறியலவோ. (30)

ஆயிரம் பாவங்கள் செய்தவெல்லாம்—ஏழை
ஆட்டின் தலையோ டகன்றிடுமோ
தீயவும் நல்லவும் செய்தவரை—விட்டுச்
செல்வதொருநாளு மில்லைஐயா. (31)

ஆதலால் தீவினை செய்யவேண்டாம்—ஏழை
ஆட்டினுயிரையும் வாங்கவேண்டாம்
பூதலந்தன்னை நரகமதாக்கிடும்
புத்தியைவிட்டுப் பிழையுமையா. (32)

வேறு

வாய்பேசா உயிர்களெலாம் வாய்பெற் றங்கு
வாதாடி வழக்கிட்ட வாறீ தென்னத்
தாய்போலுந் தயவுடைய தரும மூர்த்தி
சாற்றியநல் லறவுரைகள் யாவுங் கேட்டு. (33)

### வேறு

தீக்ஷிதரும்வாளை விட்டெறிந்தார்—ஓமத்
தீயெரிகுண்டமும் அழித்துவிட்டார்
மோக்ஷமிவையுந் தருமோவென்றார்—ஞான
மூர்த்தியின்பாதம் பணிந்துநின்றார். (34)

செய்பிழையாவும் பொறுத்தருள்வீரெனச்
சேவித்து மன்னனும் தாழ்ந்து நின்றான்
ஐயனே! நாட்டில் கொலைதவிர்த்து—நாளை
ஆணையும் கட்டுவே னென்றுரைத்தான். (35)

மந்திரவோலை எழுதுபவ—ரந்த
மன்னவனாணை யிம்மாநிலத்தில்
சந்திர சூரியருள்ளளவும்—நிலை
தந்திடச் சாஸனம் கண்டாரம்மா. (36)

பாறைகள் மீது வரைந்து வைத்தார்-வழிப்
பக்கமும் தூணில் பொறித்துவைத்தார்
ஆறுகுளங்கள் துறைகளிலும்—கல்லில்
ஆணையழியாதெழுதி வைத்தார். (37)

அங்காடிவீதியிற் கண்டிடலாம்—சந்தி
அம்பலந்தோறுமே கண்டிடலாம்
கங்காநதிக்கரை எங்குமிவ் வாணையைக்
காணாவிடமேது மில்லை ஐயா. (38)

## வேறு

அந்நாள் முதலாப் பின்னு ளெல்லாம்
மாதமும் மாரி வானம் பொழிந்தது
நாடு செழித்தது நகரம் சிறந்தது
உண்மை யறிவும் உதயமாயது
செம்மை வளர்ந்தது தீமை தேய்ந்தது
புத்தன் உரையைப் பொன்னுரை யாக
நித்தம் நித்தம் நினைத்த பயனைக்
கொல்லா விரதம் குவலயத்
தெல்லாவுயிர்க்கும் இன்பளித் ததுவே. (39)

—தேசிக விநாயகம் பிள்ளை

# செய்யுள் அரும்பத விளக்கம்.

## நீதிநெறி விளக்கம்

இதன் ஆசிரியர் குமரகுருபர சுவாமிகள். இவர் திருநெல்வேலி ஜில்லாவிலுள்ள ஸ்ரீவைகுண்டத்தில் பிறந்தார். இவரது ஜாதி வேளாளர்குலம். சமயம் சைவசமயம். இவர் 300 வருஷங்களுக்கு முன்பின்னாக இருந்தவர்.

1. பயக்கும் - கொடுக்கும். புறங்கடை - கடைப்புறம்; வீட்டு வாயிலின் வெளிப்புறம். இசை - கீர்த்தி. கவல் - கவலை.

2. ஓம்பாது - பாதுகாவாமல். பரிந்து - அன்புகொண்டு. எய்த்து - வருந்தி.

3. கலன் - ஆபரணம். பூண் - ஆபரணம்.

4. கற்றனம் - படித்துவிட்டோம். களியற்க - செருக்குக் கொள்ளா தொழிக. கூடம் - சம்மட்டி.

5. மெலியார் - செல்வத்திற் குறைந்தோர். எற்று - எத்தன்மையது; அஃதாவது குறைந்தது.

6. சுட்டு - நன்குமதிப்பு. நோற்பது - அநுஷ்டிக்க வேண்டுவது. சிறுமை - குற்றங்கள்.

7. கண்கூடு - பிரத்தியக்ஷம். மாசுணம் - பெரும் பாம்புகள்.

8. களிறு - ஆண்யானை. உய்யும் - பிழைக்கும். ஆருங்கிளை - நிறைந்த சுற்றம்.

9. செவ்வி - காலம்.

10. வேர்ப்பார் - புழுங்குவோர்.

11. கடு - விஷம். சிங்கி - விஷம்.

12. செல்வத்தின் - செல்வத்தைவிட. நல்குரவு - தரித்திரம். போலும் - அசை. கொன்னே - வீணாக.

13. வஞ்சித்த - வஞ்சித்த காரியங்களை.

## இனியது நாற்பது

இதன்ஆசிரியர் பூதஞ் சேந்தனார். இந்நூல் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று.

1. ஏவது - ஏவுவது; கட்டளையிடுவது. மாறு - மறுக்காத. நவை - குற்றம். கோள் நட்பு - கொள்ளுதலையுடைய சிநேகம்.

2. மானம் - பெருமை. தானம் - இருப்பிடம். ஊனம் - குற்றம்.

3. மிக்கார் - பெரியோர்.

4. பட்டாங்கு - உண்மைவழி. முட்டு - குறைதல். தக்கஉழி- தகுந்த இடம்.

5. தகை -மேன்மை. கோள்முறை - கொள்ளுதற்குரியவழி-

6. முறுவல் - பல். தெற்றவும் - தெளியுந்தோறும். சேர்வு - சேர்தல்.

## இன்னா நாற்பது

இதன் ஆசிரியர் கபிலர். இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று.

1. புணை - தெப்பம்.

2. தேற்றம் - தெளிவு. மாற்றம் - பேசும்முறை.

3. பகல் - பகலாணி. நார் - அன்பு. இகல் - போர். ஓட்டு - ஓடுதல். நயம் - நன்மை.

4. கூர் - மிகுந்த.

5. வனப்பு - அழகு.

6. ஆன்று - நிறைந்து. அவிந்த - அடங்கிய. மான்று - மயங்கி. நோன்று - பொறுத்து.

## நாலடியார்

இதன் ஆசிரியர் ஜைன முனிவர்கள். இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று.

1. எம்மை - எத்தன்மை. மம்மர் - மயக்கம்; அறியாமை.

3. குருகு - இங்கே அன்னப் பறவை

5. புது ஓடு - புதிய பானையோடு.

## பழமொழி

இதன் ஆசிரியர் முன்றுறை யரையனார். இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களில் ஒன்று.

1. நுணல் - தவளை.

5. முட்டு இன்று - குறைவில்லாமல். அட்டிற்று - சமைத்த உணவு. தவிசு - ஆசனம்.

## அறநெறிச்சாரம்

இதன் ஆசிரியர் முனைப்பாடியார். இந்நூல் பிற்காலத்தது.

1. மென்மை - யார்க்கும் மென்மைக் குணமுடைத்தாதல். ஆன்ற - சிறந்த.

2. கட்டு - களைந்து. அட்டி - பெய்து.

பெண்கள் பந்து விளையாட்டு

1 - 3 செய்யுட்கள் சிலப்பதிகாரத்துள்ளன. இதன் ஆசிரியர் இளங்கோவடிகள். இந்நூல் தமிழிலுள்ள பஞ்ச காவியங்களில் ஒன்று.

1. பொன்னிலங்கு பூங்கொடி - பந்துவிளையாட அழைக்கப்படும் பெண்ணின் பெயர். வில் - ஒளி. தேவராரமார்பன்-பாண்டியன். கதை திருவிளையாடற் புராணத்திலுள்ளது.

2. மின்னும் மின் - ஒளிவிடும் மின்னல்.

3. கையிலிருந்ததில்லை, அந்தரத்தெழுந்ததில்லை யென்பன விரைவுபற்றிக் கூறியன.

4 - 6 செய்யுட்கள் குற்றலக் குறவஞ்சியிலுள்ளன. இதன் ஆசிரியர் திரிகூடராசப்பக் கவிராசரவர்கள். குறவஞ்சி நாடகங்களில் இந்நூலே சிறந்தது.

4. குழை - காதணி. என்படும் - என்னபாடுபடும்.

5. சூடகம் - முன்கைக்குஅடை. தோள்வளை - கேயூரம். ஆடகவல்லி - பொற்கொடிபோல்வாள்.

6. இந்திரை - லக்ஷ்மி. சுந்தரி - இந்திராணி. சங்கு அணி வீதி - சங்கு வடிவமாயமைந்த அழகிய வீதி. ஒய்யாரி - அலங்காரி.




---

The B. N. Press, Educational Printers, Madras.